வேறு.

புனலினமிழாது ககனமிசை யூதை
புகுதவசை யாத பொருளதா
யனலினெரியாது படையினழி யாத
வறிவையறி வார்க டிறமினே. (௪)

வேறு.

ஐய மொன்றுமற வந்த கோனடியி
னன்பொ டொன்றியக மின்புற
மைய ழிந்திட மலர்ந்தி லங்குவிழி
மல்கு வீர்கள்கடை திறமினே. (௫)

வேறு.

பாருமெறிவளியும் நீருமெ ரியும்வெளி
பானு மதியுமிய மானுமே
சோருமளவி னுணர் வாகவொ ருமொழியி
னோதும வர்கள்கடை திறமினே. (௬)

கருகு கலியின்வலி தொலைய வுலகின்வரு
கருணை மலையினருள் பரவியே
பெருகு மதிசயமொ டுருகிய ருவிசொரி
பெரிய விழியினவர் திறமினே.

வேறு.

உளவலி முனிவர்களொழியவா
ருயிர்விட விழிகொள வுருகிவீ

மூளவினி னொருதிரு மொழியதா
மமிர்தருள் பவர்கடை திறமினோ. (அ)
கூவினு மமரர்கள் பெறலறக்
கலியுக மிதிலொரு நினைவறத்
தனையருள் செயவிறை நினைவறத்
தமைநினை யவர்கடை திறமினோ. (கூ)

வேறு.

வனைதரு வினைகழல் வுறவரு ளிறையடி
மருவுதொ றுள னுடல்புளகம தெறியவு
மலர்தரு குவளைக ளருவிகள் சொரியவு
மறிகட லொலியென வலறியு முலறியு
மனைதரு புலனவை மடிதர மனமிற
வறிவெழு மதுவற மருவிய வெளியினி
னழிதர வொழிவற மிகுவிழி நிகழ்தரு
மமிர்தது பருகிடு மவர்கடை திறமினோ. (ய)
சிதையு மெனவுடன் முதல்வரு பொருள்களுந்
திரியு மெனவுயர் பதமுறு வினைகளுஞ்
சிறுக தெனவலை யலைவரு சமயமுந்
தெளிவுத ரவிவை முழுதையு நழுவிநின்
றிதைய மலர்செய வுருகிநம் மிறைவர்தந்
திடுமடி யிணைமலர் முடிமிசை யணியவந்
திழிவு கழிவித மகமறு மமிர்சமுண்
டெமது சுகவடி வெனுமவர் திறமினோ. (யக)

மருவு குணமொடு மலமது கழியவு
மலரு மிருவினை மயலது பறியவு
மகிழ்வு மடிவற வொருபொறை யணையவு
மனனு நினைவரு மிடமது நினையவு
மருவ வுருவன தடிதலை யமரவு
மயர்வு நினைவறு மறிவது நிகழவு
மடைய வொழிவுறு மதநிலை திதிபெறு
மயிர்து பருகிடு மவர்கடை திறமினோ. (௰௨)

வேறு

உலகம னித்தமெனு வுணர்வது நித்தமெனு
வுருவரு வற்றவரோ ருருவுத னைக்கொடுநங்
கலகம னத்திடையே யிலகமு தற்பகருங்
கலைகளை விட்டெறிவீர் கடைதிற மின்றிறமின். (௰௩)

ஓதல றக்கணியா வொப்பில்ப ரம்பொருளே
யொருவடி வாகியெழுந் தருளுத லுன்னுதொறுங்
காதல்மி குத்துவரக் கண்பனி கொண்டுவரக்
கரையழி யன்புடையீர் கடைதிற மின்றிறமின். (௰௪)

ஆவியி னுக்குயிரா மாரண னோருருவா
யவனியில் வந்தருளும் பவனிவி ரைந்துதொழா
வோவிய மொத்திடநின் றுரையுணர் வொன்றொழியா
தும்மை யொழிந்திடவே யொழிவறு வீர்திறமின் (௰௫)

வேறு.

பொருளையே கருதிவெம் புலன்வழிச் செல்லுமென்

புன்மையே கண்டுவந் திம்மையே யருள்பெருங்
கருணையே யுடையவன் கழலிணைந் திடுதொறுங்
கரையழிந் துளநெகுங் காதலீர் திறமினோ. (௰௬)

நம்மையா ளுடையநா யகனையே நனவினுங்
கனவினும் நவிலுமா றன்றிவே றொன்றுநஞ்
செம்மையா னதுதெரிந் திடுதல்கண் டிலமெனத்
தெரியுமா தரவினீர் கடைதிறந் திறமினோ. (௰௭)

வேறு.

விழியா லுலகழியாவெறு முணர்வாய்விடும் வகையா
லொழியாவமிர் துண்பீர்நும துயர்பொற்கடை திறமின்

வேறு.

அளவுகண்டிட வரியபங்கய நயனம்வந்தும தாவியைக்
களவுகொண்டிட வுருகுகின்றவர் கனகநன்கடை திறமினோ
அழுந்தவாகமி ரண்டுமொன்றுற வழிவிலாநெறி தழுவி
முன், பிழந்தநாளை நினைந்துபோத விரங்குவீர்கடை திற
மினோ. (௨௰)

வேறு.

ஒழித்தே யுள்ள முணர்வுடைய
வொழியா வொருவன் வருமளவும்
விழித்தே யுறங்கும் விளங்கிழையீர்
மேவுங் கபாடந் திறமினோ. (௨௧)

வேறு.

உருநாம மொன்றுமிலா வொளிகருணை காவென்னுங்

திருநாமம் பெறவந்த திறன்பாடத் திறமினே. (௨௨)

வேறு.

தரணியில் வந்த பெருமானார் தாளிணைசூடி யஞ்ஞவதைப் பரணியை யின்றென் வாயாகப் பாடக்க பாடந்திற மினே. (௨௩) ஆக ௩௪.

---

வேறு—காடு.

குறியுரு வறிவுதா னிறைவிதன் கோலமே
குறுகுவா ருளமெலா மவள்பெருங் கோயிலே
யறிஞர்வா ழிடமெலா தழனெடுங் கானமே
யறிவிலா வவையெலா மடையவும் பேய்களே. (௧)

மறையெலா மறைவதா கியபரஞ் சோதியோர்
வடிவதா யருளுமப் பொருளொளுந் தேசுதா
னுறைவதா மகமுரு தலம்வரும் பேயெலா
முழல்வதா முலகமா மொருபுறன் கூறுவாம். (௨)

வேறு.

கல்லுங் கயவோர் மனமே யவர்தங்
கண்ணே மரமு மவர்தண் மையறக்
சொல்லு முரையே சுடுதீ யிடர்சேர
சூழு வளிமற் றவர்தந் தொழிலே. (௩)

செய்ரைச் சுடவல் லவர்தம் மளவுஞ்
செயிர்செய் பவர்சேர் வுறுதீ வனமீ

துயிரைச் சுடவல் லதுவெவ் வழலோ
வோரா விவர்தம் முறையன் றியுமே. (௪)

வேறு.

வெருவ வெரிசொரியும் விழியுமழன் பொழியுமால்
வெகுளி யெரிவிரவி மிகமிகவு மெரியுமா
லருவ வுயிருமிற வெரியுமன லதனில்வே
றனலு மிலதகில வுலகதனி னழலதே. (௫)

தருவர் தருவதில ரெனநினைவு மனமொடே
தமது தலைமைகெட வவரவர்கள் கடையிலே
யொருவர் தருமுணவு கருதியுழல் பவையில்வே
றுழலு ளுமலிகளு முளவுமல வுணரிலே. (௬)

வேறு.

அணிகொ ளும்பர் தருவுநே ரருகர் பிண்டி மாலுநேர்
கணிக பங்க ராசுநேர் கடிய கான வனவிலே. (௭)

வேறு.

நீளத்திற் சோலையதாய் நெடுந்தா பத்தா
னிழலெனவந் தடைந்தவர்க்கு நெருப்பேயாகி
வாளொத்த முட்சரித்து வறிதே காய்க்கும்
வன்பாகுங் கருவேலை வளர்க்குங் கானம். (௮)

ஆராத வருந்துதலும் புணர்ப்பு மாகு
மாயாமல் வருந்தோற்ற மம்பெண் ணேடிப்
பேராசை மான்செல்லச் செல்லப்போகும்
பேய்த்தேரே பெம்மருங்கும் பெருகுங் கானம். (௯)

செத்தபிணை யிடுகாடு சுடுகா டென்று
செப்புவர்க ளறியாதார் சிலர்தன் னெஞ்சத்
தொத்தனுதா முணராதுண் டுடுத்து வாழு
முயிரோடும் பிணம்பயில்கா டொழிய விட்டே. (௰)

வேறு.

அறங்காட்டி யிருசெவியீ தழற்காட்டி னற்போது மலகை வாழும், புறங்காட்டிற் கொப்பதுமிப் புறங்காட்டை வேறுண்டோ புறம்பு கூற. (௰௧)

வெய்யமற மறப்பெருத்த விடயமெனி னெப்போழுதும் வெறுத்து மெய்யை, யையமறத் துறந்தவர்க ளருவருத்த திதுசுடுகா டாகை யன்றோ. (௰௨)

இன்றுனுஞ் சிலரிங்கு தீற்றினுந் தீமையுறத் தீக்குள்ளே தள்ளினுங், கொன்றுமஞ் சாதார் தங்கணெஞ்சிற் குலைகுலைந்த திக்காடு கொடிதா யன்றோ. (௰௩)

கரையற்ற நீராருங் கனன்றெழுவ திக்காட்டின் கடுமை யன்றோ, புரையற்ற பெரியோர்கள் போயகல்வ திவ்வெம்மை பொறுமை யன்றோ. (௰௪)

மேலாய வானோரும் விண்டிருப்ப துடம்புற்ற வெம்மையன்றோ, மாலாரும் பாலாழி வைகுவது மிவ்வழலை மாற்றவன்றோ. (௰௫)

இன்னமும்யாம் வேறுசில வியம்புவதே னிவ்வுலக மெல்லாமின்று, னன்னமுமாய்ப் பறந்ததுமிவ் வாரணியத் தீவெம்மை யாற்ற வன்றோ. (௰௬)

வேறு

ஓதவ ரியவெரி கானமி திலொருவ ருவெ ரதிணைய லாவ தோர், போதவு ருவதினை யாதவ வரையடு பூதக ணமணவி மோதுமே. (ஏ) அ. ருக.

—o—

வேறு—பேய்.

ஏதம ளவுதெரி யாதகொ டியவன
மேவும் வகை மருவு பேயரோ
பேதம ளவுதெரி யாதுபெ ரிதறிவு
பேசும் லகைசில பேசுவாம். (க)

வேறு.

ஒன்றென்று நின்றசில பலவென்று நின்றசில
வுபயத்து நின்றசிலபே
யன்றென்று நின்றதனை யாமென்று சொல்லியுட
னலகிட்டு விட்டசிலபேய். (உ)

இலதென்று நின்றசில வுளதென்று நின்றசில
விறைதன்னை நெஞ்சி னுணரும்
வலதின்றி மங்குமல வுடறங்கு கின்றதவ
வடிவங்கள் கொண்ட சிலபேய். (௩)

தண்டைப்பி டித்தசில சிகையைத் தரித்தசில
சடையைப் பரித்தசிலவே
முண்டித்து விட்டசில முடியைப் பறித்தசில
முசுவிற்பொ றித்தசிலபேய். (௪)

அலைகெட்டி ராதுபல தலைகெட்ட நூல்பழகி
யதுமுக்கிய மாகமிகவே
கலைகற்ற பேய்களொடு சிறுகிட் டுலர்வுவன
கரையற்ற பேய்களுளவே. (௫)

வேறு.

வறிய வர்ன வுரைபல கேட்பன
மாண்டு மீண்டினி வாராவ ழியினைச்
செறிப லான பொருள்க டெரிந்துரை
செய்யு மெல்லை செவிடுக ளாவன. (௬)

வம்பு கூறி னுடம்பெ லாம்வெறும்
வாய்க ளாகி வடித்தற்கு வல்லன
வும்பர் கோனடித் தாமரை போற்றிநின்
றுரைக்க வென்னில்வெற் றாமைக ளாவன. (௭)

பொய்மை யாகிமெய் போலவி ளங்கிய
பொருளெ டுக்கினற் புற்புதக் கண்ணின
மெய்ம்மை யான பொருளை யுளத்தினின்
மீண்டு பார்க்கின் வெறுங்குரு டாவன. (௮)

பருகு ளத்தமிழ் தம்மொழி நூல்களைப்
பக்க மோதிப் பழித்துக் கழிப்பன
திருகு ளத்தொடு தர்க்கங்க ளேயுரை
செய்யு நூல்கற்றுத் தேற்றர்க ளாவன. (௯)

ஆவ தொன்றிலை யாயினுந் தன்னமே
லாதவுன்னி யறக்கடை யாவன

பாவ கத்தொன்றி லாதமை காட்டவே
படபடத்துத்தன் பாழ்வாய் திறப்பன. (௰)

ஆறு ஞான முடையார் பிணக்கற
வாறு ஞான நெறியென் றறிந்தவர்
கூறு ஞானக் கரும்புகொள் ளாதுபோய்க்
குருடர் சொன்னசொற் கோதுகொண் டாடுவ. (௰௧)

உண்ணை லானவி டந்தொறு மற்றவர்க்
குற்ற நட்டவர் போலுற வாடுவ
கண்ண ரூர்சில ராயினுங் கைப்பொரு
ளில்லை யாகிற் கழலக் கழல்வன. (௰௨)

கண்ட மட்டி னிதுவன்றி வேறொன்றுங்
கண்டி லங்கதி யென்னுங்க ருத்தினுற்
பிண்ட மிட்டவர் தம்பிற கேஞஞ்ஞை
பிஞ்ஞை யென்றுபி றற்றித் திரிவன (௱௩)

வயிறு சாலும்வ ளர்த்தற்பொ ருட்டந்த
வானஞ் சென்று வரக்கா லுடையன
கயிறுங் கம்பையு மேடும்பி றர்க்கொரு
காட்சி போல்வரும் புத்தகக் கையன. (௰௪)

வேறு.

சவலைச் சர்கர மாகிய சமயத் தேநிலை யாவன
தலைமெய்ப் பாலுண ராதன தனுவைத் தானென நாடுவ
கவலைக் காகர மாவன கடைகட் கேநட மாடுவ
கலைவிற் றேயுண லாவன கருவிப் பேய்பல கோடியே (

அடைகட் டாவுக கோடிக ளளவிற் காமச ருதிகளை
யமைவற் றேதிலை யாமையு மறைவுற் றேயறி யாதன
சடைகட் டாமழி யாவுட றலைகட் டாதினை யாவொரு
தனைமெய்ப் பானுண ராதன சமயப் பேய்பல கோடியே. (௰)

உழலத் தானினை யாதன வுணவிற் காவன தேடுவ
வுணர்வைத் தானுண ராதன வுலகத் தார்நக வாழ்வன
கழலத் தானுரை யாடுவ கதறத் தான்முசி யாதன
கனகத் தேமன முவன கருவிப் பேய்பல கோடியே. (௰எ)

வேறு.

மெய்வருந்திக் குரவனருள் விரும்பா தென்றும்
விட்டிடமுந் தொட்டிடமு மறியா தேநின்
றவ்வருகுப் பட்டனவாய் மிகவுந் தம்மை
யகமகிழ்த்துத் திரியும்பே யனந்தங் கோடி. (௰அ)

கவலையுற்ற தம்பசியைத் தணிப்ப வேறோர்
கதியின்மை யானறந்தாங் காட்டு வார்போற்
குவலயத்தோர் பொருள்விரகால் வாங்கிக் கொண்டு
குருக்கொடுக்கும் பேய்களொரு கோடி கோடி. (௰௯)

வேறு.

தன்ம னந்தனை வெருட்டுமே பிறர்
தளரும்பு நெஞ்சுக டெருட்டுமே
வன்ம னங்கொடு கிளிகள் போலறம்
வடிக்கு மேயட நடிக்குமே. (௨௰)

நீளு கின்றசடை தன்னி ளுமைமிக
நீளுமே வினையின் மூளுமே
மீளு கின்றநெறி தன்னி னுதரவு
மீளு மேயொழுக நாளுமே. (உக)

வேறு.

பஞ்சு படுகலைகடன்னை யும்பல
படிக்கு மேதலைவெடிக்குமே
பிஞ்சு படுகலைகடன்னை யுந்துவர்
பிடிக்கு மேபட நடிக்குமே. (உஉ) ஆக எ௰௩.

பேய்முற்றும்.

---

உவமை.

சொல்லாலு மனத்தாலு மறியா வொன்றைச்
சொல்லாலே தோற்றுவிப்பத் துணியுஞ்சொற்கள்
புல்லாலே யெரிசுடுதல் போலும் போலும்
போலாதேற் புகையினெழுங் கனலே போலும். (க)

ஒளிதருநா லோதிமுடி பொருளைக் காணு
தோதியநூல் பலவுணர்ந்து பிணங்கும் பேய்கள்
களிதரும்யா னையைக்குருடர் கையாற் கண்டு
கண்டகண்ட வளவுகொடே கழறல் போலும். (உ)

கலைபகருஞ் சமயிகள்கண் காணிற் பீலிக்
கண்ணொன்றைக் காணுமெனக் கையிற் கொண்டு

தலைபறியே சமயங்களென்று தத்தந்
தலைபறித்துச் சிலசமண்பேய் சாற்றல் போலும். (௩)

அன்புறுநற் குருபரனுக் கன்பு செய்யா
தருவுருவைப் பெறவிருக்குந் தன்மை யையோ!
வின்புறுநற் கனிபாறே னினித ருந்தா
திரதருகர் புறவிருப்பா ரியல்பு போலும். (௪)

அருவாய பரனுருவா யருள்வ தொன்றை
யஞ்சாதே சிலவளவை கொண்டு தாமுங்
குருவாகிச் சிலகுருப்பேய் கூறுந் தன்மை
குருடர்க்குக் குருடர்நெறி கூறல் போலும் ஆ௲ எ௮ (௫)

---

வேறு-உட்சோலை.

போகாத துயர்மேவு பொல்லாத விப்பேய்கள் புகுமா றிலா, யோகால யத்துள் ளிருப்பா டிருச்சோலை யுட்சோலையே. (௧)

ஆகாச நீர்பூமி யனல்காலி ரவிசோம ரவியாதுமு டேகாச தரநாத னடியார்கள் பயில்வார்க ளினிதாகவே (௨)

ஆறுமிலகலை நீருமறிஞர்க ளாறு நிறைவுமவ் வருளுமே
வேறுமிலகலை கூறுபதினாறு நாலுமலதுவி ளம்பிலே (௩)

நிலவியகிளிக ளுலவியகுயில்க ணிறைபயிலியல்ப திறைவர்தாள்,குலவியமறைக ளிறைவிதனருகு குழறுவகுழறுவ மழலையே. (௪)

அழலுறவுடலு மயர்வுறவுயிரு மலம்வர வெருவி யயரும்நா ணிழலிலபிறிதவ் வழகியகருணை நிகழ்வறு நிழலொர்நிழ லுமே. (௫)

என்றிவ்வுலகுள தன்றுமுதலெதி ரின்றுவரையிதினொன்றுதா, னின்றதெனவிலை யென்றுமழிவற நின்றதொரு பொருளொன்றுமே. (௬)-ஆக அச.

---

வேறு-கோயில்

ஆதிநாதுமா மறைகள் சூழ்வதற் கரியகோயிலுக் களவுகூறவோ, வோதுநாலிரண் டடனிரண்டுதிக் குண்டமேனியக் கோயிலுள்ளதே. (க)

சமயமாறுதா னறைவதேயலாற் சதுமுகாதிகா ணரியதார்கொலோ, வமையுமாறுதா னறியவோதுவா ரரியகோலம்வாழ் பெரியகோயிலே. (உ)

வேறு.

மெய்விளக்கினர் மேவுகோயிலுக்
கெவ்விளக்குவே றினிவிளக்குமே. (௩) ஆக அஎ

---

வேறு-பெலிபீடம்.

அண்டகோடிநூ றாயிரங்களோர், பிண்டமாவிடும் பெரியபீடமே. (க)

பவத்தினர்பொடி படப்பராவிய, தவத்தினர்பலி கொடுப்பர்தம்மையே. (உ)

வேறு.

தமதரு விறைவடி வுறுதலி னிதநிகர்
தருவது மொருபொரு ளிலமிது தகவில
தெமதுயி ரெனினுமி தமுதுசெய் வதுகட
னெனவடி தொழுதிடு பலிபல பலவே. (௩)
உடையன வுடலுயி ருறும்வினை யுளனுணர்
வுலகது தனிலின முறைசெய வருபொரு
ளடையவு மமிர்துசெய் தனையினி யமிர்துசெய்
வதுமில தெனுமொலி யவைபல பலவே. (௪) ஆ ௬௬

வேறு—ஆல்

மருவிதய கமலமுறை வாளென்றும் வாழ்வதொரு
வடமுமுள ததனளவை யாமிங்கு நாடளவி
னொருவிதையி னளவளவி லோரண்ட மாகுமதி
னுளகனியி னளவையினி யார்கண்டு கூறுவரே. (௧)
அயனையுல கடையவரு மோருந்தி மாமலரி
னருளியறி வரியபர யோகொன்றி மாறுயில்கொள்
சயனமென மொழிவதொரு தாழ்கொம்பின் மேவுசிறு
தளிரினொரு தலையினுனி யேதென்பர் சாகையையே. (௨)
செறியும்வகை யரியதென வேதங்க ளோதுபொரு
டெரியவிர கொருவரறி யாதன்பி னுலகினொ
டறியும்வகை யகிலவுல காய்வந்து கூடியது

மதனில்விடு சிறியதொரு வீழ்கின்ற நீழலிலே
இரையுமெழு கடலும்வளை யாநின்ற வேழ்புவியு
மெழுமலையு முலகுபதி னுலுந்த னூடுருவும்
வரையுமிரு சுடரடைய வோரண்ட மாகுமிது
வடவிதையி னளவுமில தாலென்கொ லோதுவதே (௪)
நெரியமுய லகன்முதுகு நாகன்ப ணாமகுட
நெறுநெறென முரியநட னஞ்செ டாதரனு
மரியுமல ரவனுமதி லேநின்ற வூசல்மிசை
யுணையவரி னவர்கள்விசை போயன்றி மீள்விலரே. (௫)

வேறு

மாறாத வருளுடையான் மாறென்று லன்றிவிசை
யாறாத வவ்வூச லதிலூச லல்லவோ. (௬)
மேனோக்கி வீழோட்டி விரிதிசையே கவடோட்டிக்
கீழ்நோக்கிக் கிளையோட்டிக் கிளரவளர் வடமிதுவே. ()
ஆசையெனுந் தளையிட்டே யமையாமற் பறந்திருந்தப்
பாசம்விடப் பறவாத பறவையதிற் பறவைகளே. (அ)

ஆ ௬௬

தேவி.

அன்னையென வெழுந்தருளு மருளுடைய திருமேனி
தன்னையினி யாமறியுந் தன்மையினைச் சாற்றுவாம். (க)

வேறு.

மதுரவாரி யாய்ஞான மயமதாகி வாடாத
மலரதாகி நாடாத மணமதாகி யானாத
சதுமுகாதி வானோர்கள் சகலவேத கீதாதி
தருமனாதி யான்மீது தடவொணாத தாளாளே. (௨)
தொழுதெழா விழாவாறு சுழலுமாற னாமாலைத்
துபரினல்வி டாதாறு சொரியவாய்வி டாநாளு
மழுதபாலர் சீரும லமிர்தவாரி யாயூறி
யருள்பயோத ரீயாகி யமிர்தபான மீவாளே. (௩)
கதியிலாத நாயான கடையனேனை வாரூடு
கழலினொடு வனூடேறு கருணைவாரி யோர்கோல
மதியிலாமை யான்ஞான வடிவைவேறு கூறுக
வகைசெய்தேறு மாறுக மலைவதோடு காதாளே. (௪)
மருவுமாக மான்மேவி வருதுணைதி நேராக
மனனின்மாறி மீளாத மனனமாதி வேரோடு
மொருவமாறி மேனாடு முணர்வுநானு நேராகி
மொழியஞான மேயாக வொருசொலோதும் வாயாளே
விகடநாம ரூபாதி விததியோரொ ரோர்கோடி
விரியுமாக மீதோடி விரிவொணாத மேலான
மகுடநாடி லோர்கோடி மலருதாள்க ளோர்கோடி
மனனுநாவு மேவாத வடிவமான மாயாளே. (௫)
வெருவராம னோடோறும் வினையின்மூழ்கி வாளாரும்
விழியினார்கள் பாலோடி வினைவதோர்வு றாதேனை

யருவராம னுயேனு ளமரரானு மாரானு
மறிவொணாத தோர்கோல மருளுகாதல் கூர்வாளே. ()
அவனிநீரி னன்மாள வனலின்மாள நீர்காலி
னனலுமாள வாகாய மதனின்மாள வூடாடு
பவனன்வான மேலான பரமதேசி லேயான
படியின்மாள மாளாத பழையபாழின் வாழ்வாளே. ()
ஒருவிகார மோர்காலு முறநிலாமல் யாதானு
முளதுமாசி லாமேனி யொழியவேறு நாதார
நிருபியான வோர்போது நிருபியாத வோர்போது
நிகழ்வுறும லோர்போத நிலையதாக நேர்வாளே. (௯)

வேறு.

அனுபவந்தனி னறிவதன்றியொ ரளவைகொண்டறிவுறு வதோ, தனுபவந்தனை யொழிவின்றிய தகமைநின்றதொர் தனியையே. (௰)

உருவமென்பது மருவமென்பது முணர்வுகொண்டு ணரவொண்ணுமோ, வருவமிங்கொரு வடிவுகொண்டது விதுவெனும்பொரு டன்னையே. (௰௧)

வேறு.

பொருதுதிரிபல சமயமதிவழி புரிவதருகலை புகல்வதோ, கருதுபொருடொறு மருவியவையவை கழலநில வியகன்னையே. (௰௨)

தத்தமதிகொடு தர்க்கசமயிகள் சத்தமறிவதொ தத்

வமோ, சித்தமயலது கெட்டவவர்தெரி சிக்கவுரியதோர்
சித்தையே. (௰௩)

வேறு

மருவுரு ததற்குரைக்கும் வடிவுமில்லை யென்னவோ
கருவுரும லாளவந்த கருணைமேனி கண்டுமே (௰௪)
தொல்லையாகி நின்றதுய்ய துணைமலர்ப்ப தங்களுக்
கெல்லையான தில்லையோவென் னுச்சிமீ திருக்கவே. ()
விளம்புமெப் பொருட்குமேல் மிகுத்தநீண் முடிப்பரப்,
புளம்புகுந் திருக்கவெல்லை யுன்னவில்லையென்னவோ (௰௫)
அடையமாதி ரம்படைத்த வப்புறம் புடுப்பதோ
ருடையுமில்லை யென்னவோவென் னுள்ளடங்க லுற்றுமே
அன்னையாகி யத்தனாகி யஞ்சலஞ்ச லென்றுவந்
தென்னையாளு கோலநீர்மை யென்னதா வியம்பவே. (௧௭)

வேறு.

மாசுணமோ மறைத்தலையோ மயானமோ வாக்கிறந்த
தேசுணர்ந்த மெய்யடியார் சிந்தையோ திருந்தமளி. ()
சாத்தும்பூ மாலையினுந் தமையுணர்ந்த மெய்யடியா
ரேத்தும்பா மாலையிலே யெப்போதுந் திருவுளமே. ( )
பாதாதி கேசாந்த முவந்தணியும் பணியருளே
ஞாதாதி யாமூன்று முவந்தயினு நல்லமிர்தே. (௨௰)

வேறு.

வேதமவ டிருவாயி லோதுகீதம்
வேறுகினை விலர்காணு மேனி மேனி

செற்றவர்க டம்முடனுஞ் செறுதற் கென்றுஞ்
சிந்தைசெயுந் திறன்மறந்து சிறப்பே செய்யக்
கற்றவர்தம் முடனென பிறப்பை யெல்லாங்
கரிசறுத்த பெரியசினங் காண்மின் காண்மின். (அ)

வேறு.

பழிப்பர்கி யொருகாலு மிதுகொண்டு களவுற்ற
பயனற்ற பொருள்விட்டலா
மழித்தாலு மழியாதபொருள்பேணி யிவருற்ற
வாராமை காண்மின்களோ. (கூ)

ஓராக மேபண்டு வடிவென்றி ருந்தார்க
ளுணர்வுற்று மொழிவுற்றதோ
நேராக வுந்தங்கள் வடிவான திவர்நேதி
நேதித்தல் காண்மின்களோ. (0) ஆ௨ சந௩.

களங்காட்டல் முற்றிற்று.

---

கூழடுவார்.

இந்தக்க ளன்பட்ட பாட்டிற்கு நீரொப்பிடத்தேடி டாதீச
ஞர், சந்திக்க விதுபட்ட தொப்பப் பெருங்கூழ் சமைப்பா
ரை யழைமின்களே. (க)

வேறு,

சாந்தியுள்வரு தாந்திவந்தடி தந்தார்திருவரு டன்ஞேடே
மாந்திநல்லது மாலாய்கூழட வாரீர்கூழட வாரீரே. (உ)

வேறு.

பொறையே மிகவரு நிறைவீ புகழ்புனை பொன்னீ யருளினை யுன்னியக், குறையா நிறைவுறு திருவீகூழட வாரீர் கூழடவாரீரே. (௩)

மேலா ரொடுமிகு முறவீ தீவினை மிகுவாரொடுவிடு துறவீயம், மாலாரொடுவரு கருணைக்கூழட வாரீர்கூழட வாரீரே.

முடிவேதிதுவரு முதலேதெனவொரு மொழியானளவிடமுடியாத, வடிவேயடைவதோர் மதியேகூழட வாரீர்கூழட வாரீரே. (ரு)

தன்போலெவரொடு மன்பேவிளைவதோர் தாயேபவமெனுமாயாவிவ், வன்பேகெடவரு மன்பேகூழட வாரீர்கூழட வாரீரே. (சா)

பணியேசூடிய வணியேபாடிய பத்திகூடிய சித்தீர்க்,குணியேகோமள மொழியேகூழட வாரீர்கூழட வாரீரே. (சஙஅ)

வேறு.

ஒருமையென முன்வகுத்த சித்ரமாகிய
வுலகவுரை யமைத்து லக்கையாகவிவ்
வுலகர்பழு வையொடித்தொ டித்துநீளெயி
றுதிர்செய்தரி சிபுடைத்தி டித்துமேலவர்
பெருமைமுடி யையடிப்பு வைத்துமேலுறு
பிணிசெய்யு டல்கடத்து லைச்செய்தாருயிர்
பெரியவிரு ளைநெரித்தெ ரிப்பதாய்வினைப்
பிதிர்செய்தமிர் தம்மினிச்ச மைக்கவாருமே (க)

தினிதி னிப்படிச மைத்த போனக
மெடுத்து மெத்தென விருத்துமே. (௪)

கூழ்வார்ப்பு.

தன்மை யாரும்வகை மீளு மாளுடைய
தம்பி ரானரிய தாள்கடா
முன்மை யானுரிய வன்ப ரின்புறு
முளக்க லங்களை விளக்கியே. (௫)

கடங்க ளோடுமுள மான மெய்ப்பரி
கலங்க ளோடு முளவாவிதா
னடங்க நீயமிர்து செய்க வென்னவரு
ளையை தானமிர்து செய்யுமே. (௬)

அணங்கு தன்றிரு வுளப்பிர சாதமது
வடைய வேநிறைய வயிலுவீ
ருணங்கு கின்றவுட லான பேய்களையு
முடைய நீரழையு முண்ணவே. (௭)

வேறு.

வெந்தவுடலம் விடும்பரிசு வீடுவினவி மிகப்பசித்து
வந்தபேய்க்கும் பசிதீர வாரீர்மெத்த வாரீரே. (௮)

நசித்தேனிந்தக் கணத்துள்ளே நசியாவண்ணா நன்குமிகப்
பசித்தேனென்று பதைக்கின்ற பதைப்பைத்தணிக்க வா
ரீரே. (௯)

துரியாதீதம் பதினொலிற் றோன்றியெவர்க்குந் தோன்றாத

பெரியார்தம்மை யானென்னும் பிரமப் பேய்க்கும் வாரீரே.

ஒளிதங்கியமா மறையோதி யுள்ளபொருளை யுணராதே
பளிதஞ்சுமந்த கழுதையதாம் பனவப்பேய்க்கும் வாரீரே. ( )

படித்துமறைகள் பொருட்படுத்திப் பயனினெட்டிப் பாராதே, வடித்தகிளிபோல் வருமாயா வாதப்பேய்க்கும் வாரீரே. (௰௨)

வேதாகமங்கள் சொன்னபொருண் மெய்மையறிவார் போன்றிருந்து, பேதாபேதஞ் சாதிக்கும் பெரும்பேய்தனக்கும் வாரீரே. (௰௩)

சுத்தப்பிரம மதுநிற்கத் தொள்ளைச்செவியி னுணவான
சத்தப்பிரம மென்றோதுஞ் சளப்பேய்தனக்கும் வாரீரே.
பணியப்படுவா ருள்ளிருக்கும் பரதேவதையைப் பாராதே
மணியைத்துலக்கிக் கிணுகிணென வரும்பேய்தனக்கும் வாரீரே. (௰௫)

ஞானம்போலச் சிலசொல்லி நாடற்கரிய முத்தியினுந்
தானுஞ்சிவ’மும் பாசமுமென் னைசவப்பேய்க்கும் வாரீரே.
எட்டுக்கரும முட்டறச்செய் தெட்டுக்குணத்தோ டெழின் முத்தி, வட்டத்திருக்கப் போமூத்தை வாய்ப்பேய்தனக்கும் வாரீரே. (௰௭)

வெறுவாய்கொண்டு மென்றுமனவிகாரங்கொண்டு சிலபிதற்றிப், பெறுவாரன்றி முத்திபெறும் பிடகப்பேய்க்கும் வாரீரே. (௰௮)

உடலை விடுகை முத்தியென வுரைத்தவுண்மை யுணராதே
முடலையுடலை நானென்னு முழுப்பேய்தனக்கும் வாரீரே.
இயக்கந்தீர்வார் நன்முத்தி சேர்வாரென்னுந் திறன்கேட்டு
மயக்கஞ்செய்யும் வாமப்பேய் வாய்க்கேநெருப்பைவா
ரீரே. (உ0)

அச்சந்தநிக ளெல்லாமா யல்லாதிருக்கு மறிஞரையு
மெச்சந்தநியுந் தமக்கன்றென் றியம்பும்பேய்க்கும் வா
ரீரே. (உக) ஆடு சஎ0

கூழ்வார்ப்பு முற்றிற்று.

---

வேறு—குணலைவாழ்த்து.

நின்மலன் கருணை யானடங்கவு
நெஞ்சறிந்திட * நினைந்தபின்
பொன்மலர்ந்தவிரு தாளினல்லவருள்
புகழுவாருளன் மகிழவே. (க)

வேறு.

பாவிடை நூல்படு சிந்தைதனிற்
‡ பதைப்பற வந்துப ராபரனார்
சேவடி தந்தமை பாடீரே
செய்ப கருணையைப் பாடீரே (உ)

---

* நினைந்தனை எனவும் பாடம்.

‡ பரப்பற எனவும் பாடம்.

மீட்டவி ரகினைப் பாடீரே
விளம்பிய தொன்றென்று பாடீரே
நாட்ட வருளினைப் பாடீரே
ஞானவி னோதனைப் பாடீரே. (௩)

என்னையொ ழித்தமை பாடீரே
யென்னுயி ருண்டமை பாடீரே
தன்னைய ளித்தமை பாடீரே
தத்துவ நாதனைப் பாடீரே (௪)

துன்னிநி றைந்தொழி யாதுநின்ற
சொரூபா னந்தச் சுடர்வையந்
தன்னி னடந்தமை பாடீரே
தானெனை யாண்டமை பாடீரே. (௫)

ஞானமு ஞேயமு ஞாதுருவு
நாடிட வொன்றின்றி நின்றதுநா
மான முழுநலம் பாடீரே
யல்லதில் லாதமை பாடீரே. (௬)

மதிபிலி யாவுழல் கின்றநமை
மானுட னாயவ னாளவந்த
வதிசய மேகினந் தாடீரே
யார்த்தெழுந் தார்த்தெழுந் தாடீரே. (௭)

என்றினைவே யேமிகப் பாடிப்பாடி
யெழுந்து விழுந்தெழுந் தாடியாடி
நன்றிந் ருங்கண மானதெல்லா
நாஞவி தம்பட நட்டமிட்டே. (அ)

வேறு.

வரவுசெல வுறுபழைய வழியொழிய மொழியுங்
குரவனடி பரவியிடு குணலைபல பலவே. (௯)
உரைகழிய வளமழிய வுணர்வழிய வணையுங்
குரைகழல்கள் பரவியிடு குணலைபல பலவே. (௧௰)
மதமதென விழிசொரிய மயிர்புளகம் வரவே
குதுகுதென வுளமுருகு குணலைபல பலவே. (௧௧)
கொடியபவ முடிவுசெய்த குரைகழல்கள் பரவா
முடியவிவ ரிடுகுணலை மொழியமுடி விலதே (௧௨)

வேறு.

பிணக்குறு மாறுச மயங்கத்திப்
பேரிருள் சேர்மனங் கொண்டுநின்று
கணக்கிடு மாறுத விர்த்தபிரான்
கழலிணை பாடிக் களித்தனரே. (௧௩)

வேறு.

பார்சமல மறவருளு பார்வையான் வாழியே
பாடுமறை முடிவினட மாடுவான் வாழியே

வாசமல ரெனமுழுது மேவினன் வாழியே
மாகரறி வரியவிரு தாளினன் வாழியே. (கச)

கோசமொடு முழுதுமற நூறினன் வாழியே
கூறவிர கரியமொழி யோதினன் வாழியே
நாசமறு மறிவுருவ மாயினன் வாழியே
நாடிலது கழலுமிகழ் மேனியான் வாழியே. (கரு)

வேறு.

நினையுமாற நின்றநின் றிலங்குசோதி வாழியே
நேசமோடு மீசனென்ன நெஞ்சிலாத வஞ்சனை
மெனையுநீதி யன்பரோ டுவந்தநாதன் வாழியே
யென்னையாள வந்தகோல மென்றும்வாழி வாழியே. (கசா)

வேறு.

பந்தபாசம் வேரொடும் பறித்துவீழ வென்றலை
தந்தபாதம் வாழியே சமைந்தபார்வை வாழியே (கஎ)

வேறு.

வைத்த வைத்தக ணழித்தவடி வாழியே
வைப்பி லாதக ணளித்தவடி வாழியே
யெத்தி முத்தியரு ளீசனடி வாழியே
யென்னை யாளுடைய வெந்தையடி வாழியே. (கஅ)

சுத்த மறைதொடர்ந்த தாளினன் வாழியே
துற்றுவரும் பெரும்பவ நாசனீ வாழியே

தத்துவ நெறிதிறந்த சேவகன் வாழியே
தர்க்க சமயசண்ட மாருதன் வாழியே. (௧௯)

வாழிதங் குருபரன் மெய்ப்பத்த ரானவர்
வாழிமறை துணிபொருள் சிந்தித்து வாழ்பவர்
வாழிபர மானந்தந் தித்தித்து வாழ்பவர்
வாழிசொரு பானந்தன் தத்துவப்பிரகாசனே. (௨௰)

தோத்திரமாகிய குணலைவாழ்த்து முற்றிற்று.

ஆகத் திருவிருத்தம்—௪௯௮

---

வெண்பா.

தரணிபுகழ் தத்துவனார் தாமுரைத்த ஞானப்
பரணிதனைக் கட்டவிழ்த்துப் பார்க்கிற்—கரணமுடன்
சேர்ந்துமண வாத சிவமணமே பூரித்த
சாந்தமண நாறுமே தான்.

அஞ்ஞவதைப்பரணி முற்றுப்பெற்றது.

---

பதினைமூன்றாவது

# மோகவதைப்படலம்.

கடவுள் வணக்கம்.

மதிபரிதி யெரிநீர்கால் வானவனி யியமானன்
வடிவா யெல்லா
வதிபதியா யனைத்துமாய் யல்லாத வறிவுருவை
யகத்துள் வைப்பாம். (௧)

சொல்லாற்றம் மதிவிரகாற் றாயதிது தீயதிது
வென்னு * மாக்க
ளெல்லார்க்கு மதுவதுவா யிறையிருக்கும் படியேயா
யிருக்க வென்றே. (௨)

விழுமதிகம் பாவுலகில் வீடுபெற முயல்பவர்க்கு
வேத நான்குந்
தொழுமதிகம் பாலமெதன விளமதியோன் றணிந்தவரைத்
தொழுதல் செய்வாம். (௩)

பேதமதி யுளதாகிப் பிணங்குமதி யிருள்போகப்
பிறிதொன் றில்லா
வேதமதி சயமாக விளம்புநிர திசயமதி
விளங்க வென்றே. (௪

வேறு.

கடியவினைமேவு காயமனநதி
காரணவசுரேசர் கணமெலா

* மார்க்கர் எனவும்பாடம்.

முடியமறமேவி முனியுமறவாழி
முதல்வனிருதாள்கள் பரவுவாம். (ரு)

கலகமதனுதி படையதிபரவி
கழியவொழியாத கருணையா
னுலகமிடர்மாற வுளதுரைர்விவேக
வொளிநயனவாழி யுதயமே. (சு)

வேறு.

அகமுளரி தனினுதவு மகிலவுபி ரகமுளரி
யருமறைகணுன்
முகமுளரி யெனமுனிவர் மொழியுமுனி பதமுளரி
முடியினணிவாம். (எ)

எழின்முளரி யொழியவரு மிருமுளரி யருளியிறை
யிருவினையெலாம்
விழிமுளரி கொடுபருகி மொழிமுளரி மலருநலன்
மிகவிளையவே. (அ)

வேறு.

துறைகூறு படுமாறு சுழலாறு கலவாத லொளியானநான்
மறைகூறு மதஞான மணநாற வருமியானை வலிபாடுவாம்()
சுலமாகை பலமாக மலைவாதி லலையாது தமைநாடியே
நிலமாக வெணைபாலி கழல்சூடி யுளஞான நிகழ்வாகவே.

மதியாளி சமயாதி வழியாறு மிறுகாலின் மறுகாலறுங்
கதியாகு மெனவாறு முகமாகி யருள்காலை கழல்பாடுவாம்.

நவையாகு மதாசால நலஞ்சு மிதுவாத மெனுமாறு போ
யிவையாவு மெமதாகி யெவரோடு மவிரோதமிசைவாகவே.

வேறு.

வதையுரையில் வழுநறவு விழைவுகள வெனவொழுகு
மயல்கணிலைவுங்
கதையுமற வறிவருளு கமலமலர் வருகமலை
மலர்கருதுவாம். (௰௩)

ஒழியவரு முடலினுட னொருகலவி யறவுதறி
யுயிர்களுணர்வோர்
மொழியவரு மறுகலறு பதமெனு முலகுகளின்
முடிவுபுகவே. (௰௪)

வேறு.

ஒன்றுமாய்வற நிற்பதில்லை
யுளத்தொழுங்கற யாவையும்
பொன்றமாய்வது முத்தியென்றருள்
போதியானடி யோதுவாம். (௰௫)

உரையுணர்ச்சியி னுனிகழ்த்துவ
தொன்றுமற்றது வாகவே

பரவு புகழ்பழி பெறலிழ வுறவயல்
பதுமைபு ணர்பவள் பிரிவுற வுகமுயிர்
பலவு நிலைபெற னிதனமெ னிதியொரு
படியு மடிமகிழ் வறநிக ழுளமுடை
வரவு திரிவறு நிறைவுறு மறிவுதம்
வடிவ தெனவனு பவமுள முனிவரர்
மதுரமொழியமிர் தினைநுகர் வுறவுள
மகிழும் வனவர மகளிர்க டிறமினோ. (கசு)

வேறு.

வீரஞ் சிறந்த சிலையநங்க வேளைவென்கண் டருளியவோங்
காரஞ் சிறந்த கனதனத்தீர் கனபொற் கபாடம் திறமினோ.
நல்லா தரத்து மைந்தர்க்கு நாவா லன்றி நயனத்தாற்
சொல்லா தெல்லாஞ் சொல்லுவீர் சுட்பொற் கபாடந்
திறமினோ. (கஅ)

ஐயங் கொண்டு நடுத்தேடி யறிவோ ரறியப் போதமணஞ்,
செய்யுங் கொங்கை யருளுவீர் செம்பொற் கபாடந் திற
மினோ. (ககூ)

கன்னிநாடுஞ் சோணாடுங் கவலை தீரும் படிவந்தென்
சென்னிநாடும் பதம்பாடச் செம்பொற் கபாடந்திறமினோ.
வன்னி யன்ன விறன்மோகன் மாள வந்த மலர்ப்பதத்தென்
சென்னி கொண்ட பிரான்வென்ற களப்போர்பாடத் திற
மினோ. ஆ(உ௫) ௫0.

## காடு.

எனையாள வுருவாகி வருகோல வருண்மாது
மிவள்பேயும்வாழ்
நினையாமுன் மனன்வேல வழன்மேவு மொருபாலை
நெறிகூறுவாம். (க)

மண்மாரு நீர்மாரு மெரிமாரும் வலிமாரு
தம்மாருமேல்
விண்மாரு மாளாத தொன்றில்லை நிலையாமை
யழல்வேவவே. (உ)

இருடாவும் வன்னெஞ்சர் நன்னெஞ்ச ரென்றில்லை
யார்கண்களுங்
குருடாய்வி டுந்தீய கடமண்டு கோபக்
கொடுந்தீயிலே. (ங)

எத்தீயி லுங்காம வெந்தீக டஞ்சேரி டும்பைக்கெலாம்
வித்தீயு மதுசா டாத்தீயு மவ்வாறு மேல்கொள்ளுமே (ச)

நாசஞ்செய் பவவன்னி யழலாற வருண்மாதி னுமங்கனா
நேசஞ்செய் மொழிமாரி பொழிபோது
மொருகண்ணு நீரில்லையே. (ரு)

காயத்தி லுயிர்கால வனல்வெளவு மழல்மாற
நிழல்கண்ணிநன்

அரிமு னிடவுணு மமுதல விதுபெறு
தவனு மலம்வரு மமுதென வமரர்தா
மெரிமுன் மெழுகென வுருகினு மடியரா
யினிய மொழியமிர் தருள்பவர் திறமிதே. (கூ

வேறு.

எஞ்சவுல கங்களமிர் துண்டகளி தன்னினிறை யோர்னிரு கழற், கஞ்சமலர் கண்டகளி விஞ்சவரு வீர்கடைதி றந்திறமிதே. (௰)

மெய்தழுவ வுங்கணிலை யுங்கலையும் வீழ்வுற விரும்பியிறைமுன், கைதொழுது நும்மையு மிழந்துவிடு வீர்கடைதி றந்திறமிதே. (கக)

வேறு.

சமய விதமள வறவுள துறைதொறுந்
தமர மிகவரு கலைபல மொழிதரு
சகல வினைகளு முதவிய வுகுறை
சரமு மசரமு மெனவரு முயிரவை
யமையு முடல்கடொ றுளவக முளரித
மமரு மகமென மருவிமு னறைதரு
மகில முதவிய வறிவன தடிபணி
யமரவ னிதைய ரணிகடை திறமிதே. (௰௨
உணரு முனிகண மடிசய சயவென
வுரைசெய் துதியொடு தொழவள வறுசிர

முடைய வுபநிட முவகைபொ டுரைசெய
யுளமெய் யுணர்வதி சுகமொரு கரையறு
புணரி யொருதன திடனென விதமுறு
புவன முழுதையு மமுதுசெய் தறிதுயில்
பொறிகொ ளரவணை மிசையமர் பரனடி
புகழுபு னலர மகளிர்க டிறமினே. (௬௩

அசையு முடலினி னுரவிய நெகிழ்வன
வவனி புனல்சுடு வனவசை வனவன
லனில மிடைவெளி ககனமு னுருவல
வறிய நயனமு முருவறி கருவிய
திசையு மொழிபுல னவைமன முதல்களு
மிணையவு யிரது முழுவது மறிவல
வெவையு மறிவறி வுருவெனு மிறைகுண
ரசித வரையர மகளிர்கடிறமினே. (௬௪

உதய வரையர மகளிரெ மிரவிமு
னுடுவு மவாதி பதியெனு ம்தியமு
மொளிர்வ திலகுல கிருள்கெடு வதுமிவ
னுதய முறிலிவ னலதில திறையென
விதய வெளியினி னிலைபெறு மறிவுரு
விரவு பகலறு மிரவிமு னிகழ்கில
னிவனு நிகழ்வதில் விறையொளி யினிலென
விவரை நகும்வனி தையர்கடை திறமினே()

னேயத்தி னருள்செய்ய பாதத்த வர்க்கன்றி
நிழலில்லையே. (௬)

வேறு.

குறுகினண்ட ரழிவரென்று மொழிவதின்கொல் கொடிய
தீ; முறுகியண்ட முகடுகொண்ட மூளரியாறு முனியுமே.
கருகியிந்து நிறனழிந்து கடமெழுந்த கனலிலே
யுருகியந்த வரியுமென்று முதறியின்க ணுறைவதே. (அ)
கலையிலங்கு மானையும்பர் கடவுளென்று விடுவதோ
மலையினும்பர் புகினுமண்டு மதனவங்கி விதனமே. (௯)
தரையினின்ற வவையெனும்பர் தருவுமில்லை சுகதர்த
மாசுமில்லை யுரைசெய்பந்த வனலிலெங்கு மழியுமே. (௰)
அழியுமிந்த வனலினெந்த வுலகுமென்ற வருகர்தா
மொழியுமந்த வருகர்பிண்டி மாமுமில்லை முடிவிலே (௰௧)

வேறு.

உள்ளிற் பாதிப் போதும் பிரிந்
திரேனென் றுண்பேய்க் குரைக்கும்பேய்க்
கள்ளிப் பாவை யல்லாலோர்
கள்ளிப் பாவை யில்லையே. (௰௨)
பொருவிறந்த வானவரும் புகன்ற விந்தக் கடத்தீயை
வெருவியன்றோ பிறப்பில்லாவெளியாம் வீடும்விரும்புவதே

வேறு.

உன்னவரி தாயதிரு வுருவுதன்னை

யுணருமதி மாறொழிய மாலுமில்லை
பன்னுகலை யொழிய வொரு கலையுமில்லை
பரமாம்ஸ மென்பதல்லாற் பறவையில்லை (௯௪)

பெருகிவருந் திருவுள்ளக் கருணைநீரும்
பேணுமடி யவர்தமது பெருகுமன்பா
லுருகிவருங் கண்ணீரு மில்லையாகி
லுலகிலுயி ருய்வதற்கோ ருபாயமுண்டோ. (௯௫)

வேறு.

தம்பி ரானிரு செங்கம லப்பதந்
தங்கி டாமன னேயித்த ழல்வன
மெம்பி ரானையுன் னுதவு யிர்களே
யிவ்வ னத்தினி யங்கிடும் பேய்களே. (௯௬

காடு முற்றும் ஆக ௯௬.

தேவி-உட்சோலை.

துப்பி லாவல கைக்கணஞ் சேர்புறஞ்
சோலை யைச்சில சொல்லினஞ் சொல்லுதற்
கொப்பி லாருறை கின்றவுட் சோலையை
யுரைப்ப தன்றது வுஞ்சிறி தோதுவாம். (௧)

தாயும் பூதலத் தென்னையு மாண்டுகொ
டம்பி ரானுமடியரு மல்லது

பேயும் பூதமுந் தேவரு மற்றும்பி
றக்கும் யாரும் புகுதப்பெ றூர்களே. (உ)

வேறு.

வெந்து தாபதர்க டாயுதர வெந்தீயினுல்
வந்து தர்பமறு நீழலவண் மந்தாரமே. (ங)
மெய்ம்மையேபெறவி ரும்பியடி மேவில்விழை
தம்மை யேபெற வழங்குமவள் சந்தானமே.[யத்
பாரி சாதமுட னும்பர்பல மூந்தருதலாற்
பாரி சாதமென வும்பர்முனி வோர்பகர்வரே.(ரு)
ஏம நல்குர விரந்தவர்க ளெல்லையில்பாரந்
தாம நல்குமரி சந்தனமெ னச்சொற்றுவே. (சு)
கற்ப கந்தருவ தக்கலைக டந்தபொருளே
கற்ப கந்தருவ தக்கலைக டந்தபொருளே. (எ)

வேறு,

பிறிவழி யின்றி யுருகிய நெஞ்சு
பெருகிய வின்ப வுருவையே
பொறிவழி யின்றி மலர்வன நின்று
புலனெனு மைந்து தருவுமே. (அ)
மலர்தரு பஞ்ச தருமது வின்ப
மறிகட லென்று மறையெலா

மலரவ னந்தன் மகனர னின்ப
மதிரொரு விந்து வளவதே. (சு)

வேறு.

யாது நாசமு றவழி யொன்றிலா
வின்ப மாய்விளைந் தென்றுங்க ருணமா
யோது நாலு மறையின் கொழுந்தின்மே
லுள்ள ஞானக் கொழுந்தொன்று மோங்குமே.

முடிவி லாப்பெரும் பாழாய்ச் சராசர
முற்றுந் தீயவு மற்றெனை யாளவும்
வடிவி லான்வடி வாகிவ ருந்திரு
மாது பார்க்குங் கழுநீர் மலருமே. (௰க)

வேறு.

பத்தி யாங்கடற் றேன்றுமோர்
பாவை முன்றிலிற் சங்கநன்
முத்தி யாம்பெறவ ழுங்குமே
முன்னை நான்மறைமு ழங்குமே. (௰உ

மொழியி லுள்ளப் பரிதெனு
முளரி நல்குமுத் தேவரு
மழியு நாளினு மழிவிலர்

வளவிலாதமர் நிதியைஈய.
உட்சோலை முற்றும் (௰௩)

வேறு. தேவி கோட்டம்.

தொந்தமி லாவுள மென்றுமொ ழிந்தன
சுருதிகள் சொல்லளவா
வந்தமி லாதவ கண்டனொ டம்மை
யமர்ந்திடு மாலயமே. (௰௪)

விடலில மேவரும் வேதவி ழுப்பொரு
டணைவிட லில்லடியா
ருடலில மேயென வோர்தினன் வாதநல்
லூரனு வப்பினொடே. (௰௫)

வேறு.

அண்டமெலாந் தன்னுடைய வகத்தடக்குந் திருமேனி
யம்மைக்கேற்க
வுண்டெனலா வதுகோயி லன்பருள மல்லதுவே
றுலகத்துண்டோ. (௰௬)

வாசல்

செழுந்தாள வடமன்றி யகிலாண்ட வடமணியுந்
திருவோர்வம்மா
தெழுந்தருளுந் திருவாச லிருசெவியா மடியவரோ
பெரியார்யாரே. (௰௭

## விளக்கு.

என்றுமதி யொழியலகைக் கிடும்விளக்கா மன்னைதனக்
கெல்லாருள்ளு
மொன்றுமதி யார்தன்னை யொழியவலி யாதவிளக்
குலகத்துண்டோ. (ல௮) ஆகூ அச.

## தேவி கோலம்.

தாயிலும்வந் தெனையாண்ட தம்பிரான் மலர்ப்பாதந்
தரித்தோருள்ளக்
கோயிலுவந் தருளியுறை கோமளத்தின் றிருமேனி
கூற லுற்றும். க)

## வேறு.

முதியலோக மீரேழின் முளரிவாழு முதாதை
முதல்பிபீலி கர்தேக முடிவதாக மேல்கீழ்செய்
மதியும்வாழ்வும் வாணாளும் வலியும்வேறு வேறாகி
வருமநேக மாகோடி வடிவிலேக மாயாளே. (உ)
நகிலுமாதர் வேல்போலும் விழியும்வாணி லாவீசு
நகையுமோர்வி டாதோதி நரகினாளும் வீழ்வேனை
யகிலமாத ரார்சேத மகலவாள வோர்மேனி
யகிலநாதர் தாமேவ வருளுகாதல் கூர்வாளே. (௩
நயனநீரொ டோர்வாது நதிசெய்நாதர் சீர்பாத

நளினகீத நாவார நவிலுவார்க டாமார
வயனுமாலு மேருளு மவனுநாளு மாராயு
மழிவிலாத வோர்போத வமிர்தபான மீவாளே. (சு)

நிலனில்வானில் வாழ்வோர்க ணிலையிலாமை தானுடி
நிகரில்வீடு சேர்போத நெறிகள்போல வேகூறு
சலனவாதில் வீழாது தமையலாது தேடாது
சமதமாதி சேர்வார்க டலையின்மேவு தாளாளே. (ரு)

வேறு.

அடியவ ரளவறு பிறவி யச்சம
தறவரு ளியபத மறியு மித்தனை
முடியறி வுறமுயல் பணிய வர்க்கிலை
மொழிமுடி வெனமறை முடிவு ரைக்குமே. (கூ)

அலர்மண முறைபொருண் மணிய திற்பிரபை
யவையிவர் நிகரென மிகவு ரைப்பதோர்
கலவிசெய் தொருவடி வுறம தற்செறு
கடவுளை மருவிய கனத னத்தளே. (எ)

அருவென வுருவென நிகழு னைத்துமோ
ரணுவென வவளொரு திருவு ருக்கொளு
முருவினை யணுவினி னணுவெ னக்கொளு
முணர்வரி தவள்செயு மொருந டத்தையே. (அ)

வேறு.

நிகழுமுல கினிலகில வுயிர்விழியு நிகழுமொளியே
திகழுமெரி மதியிரவி திகழுமொளி திருநயனமே (கூ)
கவியுமிகு ககனவொலி யுலகினுயிர் கருதும்வகையே
செவியினுறு திசைகளையு முதவுமவள் செவிமலர்களே. ()
நவமணியு மிறைவிதிரு வுருவினொளி யுடனவிலலா
மூவமமல வுலகமுயி ருணர்வுணரு மொளியவொளியே. ()
கருமுதலை கவரவொரு கரியதுயிர் கழிபொழுதிலே
யொருமுதலை நினையவிருள் கிழியவரு மொளிதிகிரியே ()
கருமிடைசெய் பலகரண வவுணர்நிசி சரர்கணனெலா
முருமிடியி னரவின்முடி வுறமுழவு மொலிபணிலமே (கங)

வேறு.

கறுக்குநிசி சரன்செவி வாய்முதல ஞானகரு மங்களெனவே
யொறுக்குமொரு பதுசிரமு முருளவொரு கணையிறைவி
தனுவுதவுமே. (கச)

வேறு.

ஊனவடி வாளவுணர் கோடிபடை சாயவொழி
யாதெளிருமெய்ஞ்
ஞானவடி வாடனது ஞானவடி வான்மிகு
நலன்பெருகியே (கரு)

முத்தண்டு மொருதண்டு மலவெய்ய விறன்மோக
னெனுமந்தக
னுத்தண்ட மொழிவிப்ப துணர்வின்ப வுருவான
வொருதண்டுமே. (கசு)

வேறு.

ஒழிவினுலகெனு முருவினிறையவ
ளூரகவணைமிசை யணைவதே
யழிவிலறிவெனு முருவினலமிகு
மடியரகமல ரமளியே. (கஎ)

எந்தவளவறு மண்டமனுவென
வண்டமெனவணு விசையுமா
றந்தவளவமை கின்றதடியவ
ரம்பொனகமல ரமளியே. (கஅ)

அயர்வுநினைவறு மகமென்மலரினி
லகிலபுவனமு மில்லையே
யுயிருநிகழ்விலை பரமுநிகழ்விலை
யிறைவியுணர்வொளி யுள்ளதே (கசு)

வேறு.

அடிசூடு வாரடியா
ரமரர்முடி யவர்கோவின்

முடிசூடப் பெறுவதுவோ
பெறிற்பெறுவார் மூவருமே. (உ0)
மொழியின்மொழி மொழியினருண்
முதல்வியடி யாமொழியப்
பழியின்மறை யறியுமோ
பதம்பணிந்து பாடவே. (உக)

வேறு.

நாரணனே முதலாக நவைதீர வுலகங்காப்
பவரைக்காக்குஞ்
சீரணங்கின் பதமொருகாற் பிரியாநல் லன்பர்களே
திருமெய்க்காவல் (உஉ)
ஒன்பதுதீர்த் தமுமன்பர் தம்பாதம் விளக்கியநீர்க்
கொவ்வாதென்றே
யன்பர்கடங் கண்ணீர்கொண் டம்மைக்கு மஞ்சனநீ
ராட்டுவார்கள். (உங)

வேறு.

யாப்புச் செய்ய வலங்கலு மர்ரையு
மெனது நெஞ்சுசெஞ் சாந்த மிருகரங்
கூப்புச் செய்கை யணியென்று கூறினன்
குருகை யாளிமற் றூர்வல்லர் கூறவே. (உச)
புகலு மாறரி தாகிய பூவைக்குப்
பூத பௌதிக மாகிப்பொ லிந்திடு

மகில மாவி ப்ரமிவை யன்றியே
யண்ட ருண்ணு மமுதோ வமுதமே. (உரு) ஆகூ

ஆல்.

சிவனி டங்கொடிரு மாத மர்ந்தருளு
தெய்வ வாலமுள தென்று முன்
னுபநி டங்கள்பல வோதும் யானும
துரைக்க லாமள வுரைப்பனே. (க)

வேறு.

ஆனமுதலின்க ணேயடைய வாதியிறைபண்டை நாலுமறை
யாயவரி தென்ற வீடுவிளை யாடியருள்கின்ற தோர்மொழி
யில், வானமுதலைந்து பூதமிய மானனிகழ்சந்த்ர சூரியரு
மாயவருமென்று மோதுமொரு வாதையறநின்று நீடியது.

ஆயபலவும்பர் வானமிடை யானநிலனம்பு ராசியலை
யாழமுறநின்ற பாதலனு மாகவிவையைந்தி னேழுமவை
மேயபலவும்ப ராதியென வேறுபடவந்த யோனிகளு
மேவுசகதண்ட கோடிபலம் வீழவெழநின்ற சாகையது. (௨)

நாலுமறையங்க மாறுசிவ ஞானம்விரிஞ்ச னுமகில
நாயகர்விளம்பு மாகமமு நாடுபதினெண்பு ராணமிறை
கோலமறைகின்ற கீதையிதி காசமுடனன்ப ராவிகளி, கூர
மொழிசெஞ்சொன் மாலைபல கூறுகிளிதங்கு கூடுளது. (௩)

ஒருவமையின்றி மேவுபர லோகமுறு கின்ற வீடுமிறை
யோனையெதிர்கண்டு வாழவரு மோரளவிலின்ப வீடுமவ

னேருவமையென்ற வீடுமொருநீர்மையுறவொன்றும்
[வீடுமிவை
நீதிபெறவெம்பி ரானருள நேயமொடிருந்த நீழலது. (ரு)

வானு மிறைவன்ச தாசிவனு
மீசனுமியங்கு மாருதமும்
வாளெரியு மும்ப னுமானும்
வார்புனலும்வெங்க ணுகணையி
னுனிலனும் பிதாமகனு
மாகவரு மைந்து ஞ்சகமிவ
ராவ தனுவின்ப்ர மாணமினி
யாலி னளவென்கொ லோதுவதே. (சு)

வேறு.

சொன்னவாலி னின்னவூச லெல்லைசொல்ல வில்லையா
மன்னவாகனத்தரெல்லை சொல்லவாகி னுகுமே. (உ)

ஆகூ ாமெசு.

வேறு பலிபீடம்.

அண்டபல கோடிகளா லாரணபண் டிதரமைத்த
பிண்டபலி யிடும்பெரிய பீடிகையார் பேசுவார். (க)

எத்தாநின் றிடுநாவோ டிணையடியின் விழுந்தலைகள்
கூத்தாட வுடலமுயிர் பலிகொடுப்பார் கோடியே. (உ)

வேறு.

தம்பிறவி வேரொடு தறிக்குமிறை தேவியிரு
தாடலைகடாங்
கும்பிட லொழிந்துபய மின்றி விளையாடுவ
குறைத்தலைகளே. (௩

வாளெரிபி னிட்டபசு வாவிமகிழ் வுற்றிறைவி
வாணலகை கைக்கொளுமதே
யாளநல னுற்றறிஞர் ஞானவெரி யிட்டபசு
வாவியிவள் கைக்கொளுமதே. (௪)

நிலாவரு முகத்தினி னிலாவிய விழிக்கடை
நிலாதுயி ரறப்பருகியே
யுலாவர வரத்தனி யுலாவருவர் மெத்தென
வியோகினிகள் சிற்சிலவரே. (௫)

வேறு.

மருங்கிலா வகைவளர்ந்த தனங்கொண்டு வையமுயி
ரொருங்கெலா மொருங்கும்வகை யோகினிக ளுலாவுவரே.
அப்பொழுதைக் கப்பொழுது மதிசயமா மதுவேகொண்
டெப்பொழுது மதிசயமா யிருப்பரிடா கினிகளே. (௭)

வேறு.

இருணைக் கிரைகொடுத் தெழிலுருக் கொடுசகத்
துருணைசைக் கிடனறுத் தொளிர்வர்யோ கினிகளே (அ)

பகலுமத் தழுமறப் பரமதத் துவமுறச்
சகலவத் துவுமெடுத் தயில்வர்சா தகர்களே. (கூ)

வேறு.

அகிலமு மறவிழிந்த தாளுடையா
ரளவறி வறவுயர்ந்த நீண்முடியார்
பகலிருள் றநிறஞ்செய் மேனியினர்
பலிகொள வுலவுமந்த்ர பைரவரே. (ய)

அணிமுடி யளவிறந்து மேவினரா
லணிமலர் பெரிதுவந்து சூடுவர்நீள்
பணிமுடி தரவிழிந்த தாளவர்சேர்
பரிசுற வருள்வர்மந்த்ர பைரவரே. (கக)

கரியினு நிறனிருண்ட பேய்தொழவே
கருணையி னிரவியிந்து தாரகைவா
னெரியொளி கெடவிலங்கு பேரொளியா
யிலகுற வருள்வர்மந்த்ர பைரவரே. (கஉ)

கலகலெ னணிசிறந்த பைரவர்நீள்
கலைகளி னொலியடங்க வீணைபூ
தலகலி கெடவியைந்த கீதமொடே
தமருக விசைவழங்கி யாடுவரே. (கங)

பழகிய வுடலமிந்தி யாதியினோர்
பணியற மதிவழங்கு நாதர்கள்பே

ரழகிய கருணைகண்டு நீள்விழியா
லருவிகள் விடுவர்நின்று சாதகரே. (கச)

வேறு.

அகிலசக மறையும்வகை யளவில்சுக மதுநிறைய
வமுதுசெய்துதாம்
பகலிரவு தெரிவதற விலகுமுரு வுடையர்சில்
லைபரவர்களே. (கரு)

எம்மையருள் செய்கென விரந்தவவர் கட்கினிய
பைரவர்கடாந்
தம்மையருள் செய்குதலி னொப்பர்தமை யாளுடைய
தத்துவனையே. (கசு)

எருமயி டன்றலை துணித்தியமன் வென்றசிவ
யோகினிகண்முன்
சீருமயி டன்றலை துணித்தவொரு தெய்வமயி
லிற்றிகழ்வரே. (கஎ)

வேறு.

சாலவரிதென்று நாலுமறை யாயிரமுகங்க ளானவுயர்
சாகைபலகொண்டு தேடஙனி தாரணியுள் வந்து தாடனிதர்
போலவெளிவந்த நாதனிரு பாதமுடி கொண்டு பூமியிடர்
போகவெனநின்றி டாகினிகள் போதமதுவுண்டு பாடுவரே.

ஞாலமமிர்துண்டு வேகபுல ஞெகநடநின்று கால்வளைய
நாடிமனவன்கன் மேவுமுயிர் நாசமுறுமந்த கர்ரமதி

யாலம்மிர்துண்டு நாடரிய வாதியிறைபண்டை நீதியிவை யாகுமெனவன்பர் காணவிளை யாடுவர்கணங்க ளுயகரே.

பெலிபீடம்முற்றிற்று.

ஆ. கங்ரு.

---

பேய்.

போதமாம்வடி வுள்ளவாறறு போகமர்குத லின்றியே
பேதமாகிய வாதமேபகர் பேய்களைச்சில பேசுவாம். (க)

வேறு.

நீதிகணபங்க மேநிலை யானவுயிரும்பன் வானிலை, நீரின தொழுங்கு போன்மதி நேருறவியம்பு வீடிறை, போதிநி ழலின்க ணேறிய போதநெறியென்று வாதிகள், போரின் மிகவென்று சீவர போர்வைபுனைகின்ற பேய்சில. (உ)

ஏசுமுளதின் றநேகம தேகமெனநின்றி டாதுட, லேதனள வின்ப வீடுலகேழின்முடிவென்ற மாறுகள், பேசுமருகன் றனூனெறி பேணியுடையின்றி நாடவர், பேயெனவியம்ப வோர்துடை பீலிகொடுநின்ற பேய்சில. (ங)

நாடுபரனன்றி தீவினை நாகநிரயங்க ளாருயிர், நாசபவபந்த வீடெனு ஞானமவமென்று மாம்வழி, தேடுபொருள் கொண்டுநாரியர் சேரடிபொருந்தல் வீடிது, தேவர்குருவின் றன் வாய்மொழி தேறுமெனநின்ற பேய்சில. (ச)

நாதனறிவென்று மாமறை நாலின்முடிவெங்கு மோதிய
ஞானநெறிகண்டும் வீடுற நாளுநினைவின்றி நீள்வினை
வேதநெறியென்று மீள்வரு வீடுபிறிதின்றி வானக
மேவுமிதுவென்று நாடொறும் வேள்விசெயநின்ற பேய்
சில. (௫)

ஆனவுடலிந்தி யாதிக ளாகுமெனபுந்தி மானக
மாருயிர்கள்பந்த வீடுக ளாதியிறையென்ற போதமும்
வானமுதலைந்துபூதமு மாசுர்முதல்வந்த யோனியும்
வாழுமயனண்ட கூடமு மாயையெனநின்றபேய்சில. (௬)

ஆழிவளைகண்ட தேகுறி யாகவிழிகின்ற சாதிக
ளானுமவருண்ட சேடம தார்வமுடனுண்டும் வேறில
னாழியுலகுண்ட கோன்முழு தாகுமெனுமின்ப மார்குரு
கூரன்மொழிகண்டும் வேறுற வோதிமயல்கொண்ட பேய்
[சில (௭)

நாதனருள்சண்பை யான்மறை ஞானமுனிபண்டு பாடிய
நாலுமறையந்த நீதியை நாடிநெருங்கிஞ்சின் மானிகழ்
பேதமதுகண்ட போதநி பீதியெனநின்ற தாமொரு
பேறுமிழவுங்கொ ளாமிகு பேதமறைகின்ற பேய்சில. (௮)

ஆதிமறையந்த நீதியை யாயவறிகின்ற போன்முன
மாயவறிவின்மை யால்வரு மாகதிசைநின் றனேகமு
மோதுபரனென்று வீடுறு மியோகதிசையின்க ணேகமு
மோதிமறையெங்கள் பாலவி ரோதமெனநின்ற பேய்சில.

ஆழியுலகங்கள் வீடுற வாரணம்விளங்க வோதிய
வாதியிறைசந்த்ர மௌலியை யாடலதுகண்ட கோமளம்
வாழிசகதண்ட நாயகி வாழியெனவின்ப மாமகிழ்
வாசநறவுண்டு தாமதி மாறிவிழுகின்ற பேய்சில (ரு)

மேலிரவியிந்து சேய்புதன் வியாழன்வெள்ளிமந்த னீரறு
மேடமுதல்வந்த ராசியை வேறுபடலின்றி நாளெழு
நாலில்வருகின்ற வாறுக ஞாசநிகழ்சிந்த ஞாதிக
ஞாடியறைகின்ற சோதிட நாளுமறைகின்ற பேய்சில. (ருக)

வேறு.

முனிக்கண மெலாமனிதர் பந்தமுற வீடுபெற
மூலமிது வென்றுபகரு
மனக்கடவு ளானசெழு மதியொழிய வேறுபா
வத்துவில தென்றசிலபேய். (ருஉ)

விண்ணவ னியாவையும் விளங்குவது மற்றவ
னெழுந்தருளின் மேவுமுயிரின்
கண்ணவ னலாதுபிறி தில்லைகதி ரோனலது
கடவுளில தென்றசிலபேய். (ருங)

மாலய னுருத்திரன் மகேசுரர் சதாசிவரு
மற்றுமுள தேவருமெலாங்

காலவச ராயழித லாலழிவி லாமனுள
காலமிறை யென்றசிலபேய். (யச)

யாவருல கத்துவினை வெல்லவரி யாரமரர்
யாவரு மிறைஞ்சுமொரு முத்
தேவரு மொழித்திலர்கள் செய்தவினை யன்றியொரு
தெய்வமில தென்றசிலபேய். (யரு)

அந்தர மியங்குநரும் வருவரரி யாளியர
வாதிகளு மஞ்சுமுலகு
மந்திர வசத்திறைவ ரென்பதுவு மற்றதனை
யென்றுமய லுற்றசிலபேய். (யசா

முத்திதர வோதுமிரு முச்சமய நூலுமறை
நாலுமுழு துந்தருவதாஞ்
சத்திதரு மந்திரமு மெய்பொருளு மாகுவது
சத்தமென நின்றசிலபேய். (யஎ)

வேறு.

வழுத்தித் தற்பசி யார்க்கவி பாடுநர்
வழுச்சொற் சொற்றறி யார்த்தன மோதுதற்
கெழுத்துச் சொற்பொரு ளியாப்பலங் காரமென்
றிவற்றைக் கற்றிரு மாப்புறும் பேய்சில. (யஅ

படித்துப் பற்பல நூல்களுந் தாமுறு
பசிக்குக் குத்திர ராயிரந் தார்கையிற்
பிடித்துப் பிச்சையி டாரகம் போயவை
பிதற்றிப் பய்க்கழு ணுவரும் பேய்சில. (௰௯)

வேறு.

ஊணைழுக் கழியச் சிலகா லமிருந்
தூண்ணைக் கருதூற் றுடலைத் துளவங்
கூழைக் குமிழிட் டுமுகந் ததனைக்
கும்பித் துவிடுஞ் சிலகூ ளிகளே. (௨௰)

கடவா ளரிகோ முகம்வீ ரமலர்க்
கமலம் மயில்பத் திரசோத் திகருக்
குடவா தனமென் றிருகை யொடுகால்
கோணப் பழகுஞ் சிலகூ ளிகளே. (௨௧)

தீதார் மலமென் றுணரா துடலைச்
சேமிப் பவைதா னதிறு வலசிக்
கோதா மலமும் மெனநல் லறிவோர்
கூறத் திரியுஞ் சிலகூ ளிகளே. (௨௨)

மூலந் திகழுங் கியுருக் கவிழு
முடிசே ரமிர்தத் துளிமுத் தொருசெங்

கோலந் திகழ்தந் துவினுற் றகெனக்
கோள்கொண் டயருஞ் சிலகூ ளிகளே. (௨௩)

தோயத் துலவச் சுடுவெங் கனலிற்
றோயச் சுரர்சா திகள்போ கிபவா
காயத் துலவக் காயத் தைவிடக்
காயத் தினுறக் கற்குஞ் சிலபேய். (௨௪)

ஆடம் பரமா மறுமைத் துணையா
மரணைத் தமகத் தொழியப் புறனே
வேடம் பலகொண் டுநடித் துழலும்
வேதா ளகணங் கள்விதம் பலவே. (௨௫)

வேறு.

கடிய வாய வினைபல கந்துவ
கொடிய வாயன கொள்ளிவாய்ப் பேய்களே. (௨௬)

ஆக ௱௯௬.

---

தொழில்.

ஏறு கோடி யளவென்றிப் பேய்களுக்
கோது கோமிவற் றின்செய லோதுவாம். (௧)

வேறு.

அமையக்கற் பதுவிட்டுச் சிலதர்க்கித் தமையாச்
சமையக்கத் ததுகத்தித் தலைமுட்டிக் கொளுமே. (௨)

பொருதர்க்கப் பரபட்சச் சமயத்தைப் பொரவே
விருநிட்டுப் பொருநிட்டுத் தனைமெச்சிக் கொளுமே (௩)
சயமுற்றப் பொருண்முற்றத் தமிழிட்டுச் சொலவா
ரியமிட்டுச் சொலவொட்டொட் டெனவட்டித் திடுமே (௪)
சொனவத்தத் தினைமுட்டத் தொடரக்கெட் டுளையான்
வினவத்தட் டிலதைக்கத் தெனவெட்கிச் சொலுமே (௫)
உனதர்க்கப் பொருள்பத்தெட் டுளதட்டிப் படியே
யெனதர்க்கப் பொருளிற்றட் டிலமுத்திக் கெனுமே. (௬)
பரிசுத்தப் பொருளொத்தத் துவநித்தத் துவமே
துரிசுற்றுக் கெடுமித்தைத் துணிசித்தத் தெனுமே. (௭)
தலையிற்சொற் கடையிற்சொற் பொருளொக்கத் தழுவா
மலைபச்சொற் கெட * வத்தத் தினசொற்கட் டிடுமே.
துணிவுற்றத் துவிதத்தைத் துவிதத்தைச் சொலவே
பணிவுற்றுத் தணிவற்றிப் படிதுக்கப் படுமே. (௯)
குருதர்க்கத் தினிவெற்றிக் கொடியிட்டுக் கொளுமே
யொருதர்க்கக் கழுதைச்சொற் றெருதர்க்கக் கழுதே.
தெரிசித்துப் பரிசுத்தப் பொருள்சித்தத் துதவா
தெரிசித்தத் தொடுதர்க்கித் திடும்ற்றிப் படியே. (௰)

வேறு.

அறவுரைக ளவையெனவு மிவையெனவு மலகையுட்
னலகையிசுவிற்

---

* வத்திப்பன எனவும்பாடம்.

சேறவுரைசெய் பலகலையி னொலியினுயர் ககனமுடி
செவிடுபடுமே. (கஉ) (ஆ-எஎ௩)

தொழின் முற்றிற்று.

---

உவமை.

கன்றின வுளத்தொடு களத்தினி னரம்புகள்
பரம்பவமையா
தொன்றினுரை யொன்றுரைசெ யாதகலை யோதலை
கை யொப்புரைசெய்வாம். (க)

வேறு.

நன்னலத்தபர ஞானநிற்கவினை
நல்லறப்பயனை நச்சுபேய்
கன்னலைக்கழிய விட்டதற்றகழி
கோதுகொள்பவர் கடுக்குமே. (உ)

உட்கிடந்தமல னொழிவுறுதுபுனல்
கொண்டிடம்புகழு வுற்றபேய்
மட்குடந்தனின் மலத்தைவைத்தது
புறந்துடைப்பவனை மானுமே. (௩)

அறங்கொணொஞ்சொழிய வலகையன்பினொடு
கட்டுகின்றவழ கார்மடம்

புறங்கொள்செஞ்சடை யகங்கொள் காமவெரி
போதருந்தகைமை போலுமே. (ச)

தன்னினூன்றிய நின்றமானமவை
கொண்டுதன்னதுரு நாடுபே
யுன்னினூலவமை பாதவங்கொடெரி
பாவகற்சுடுத லொக்குமே. (ரு)

துதித்தலென்குருவும் யாமுமோரறிவ
தாகுமென்றுவினை சூழவே
மதித்தபேயுதவு நன்றிகொன்றவள
வற்றபாதகனை மானுமே. (சு)

கள்ளையுண்டுமுன் புள்ளபோதமு
மிழந்திடுங்கழுது கையின்முன்
புள்ளதுங்கெட வவாவிருலிரத
வாதமூதுபவ னொக்குமே. (எ)

அருந்தலும்புணர்வு மாதரித்துழலு
மலகைவலையரிடு கண்ணியிற்
பருந்தின்வாயரவின் மண்டுகங்கொள்சிறு
பறவைநுகர்நறவை யொக்குமே. (அ)

பந்தமுத்திபெற வொருவரின்றிவரு
பவமறுக்கமுயல் வுற்றபேய்

புறங்கொள்செஞ்சடை யகங்கொள் காமவெரி
போதருந்தகைமை போலுமே. (ச)

தன்னிலுன்றிய நின்றமானமவை
கொண்டுதன்னது நாடுபே
யுன்னிலுலவமை பாதவங்கொடெரி
பாவகற்சுடுத லொக்குமே. (ரு)

துதித்தலென்குருவும் யாமுமோரறிவ
தாகுமென்றுவினை சூழுவே
மதித்தபேயுதவு நன்றிகொன்றவள
வற்றபாதகனை மானுமே. (சு)

கள்ளையுண்டுமுன் புள்ளபோதமு
மிழந்திடுங்கழுது கையின்முன்
புள்ளதுங்கெட வவாவிருலிரத
வாதழுதுபவ னொக்குமே. (எ)

அருந்தலும்புணர்வு மார்தரித்துழலு
மலகைவலையரிடு கண்ணியிற்
பருந்தின்வாயரவின் மண்டுகங்கொள்சிறு
பறவைநுகர்நறவை யொக்குமே. (அ)

பந்தமுத்திபெற லொருவரின்றிவரு
பவமறுக்கமுயல் வுற்றபேய்

பேதமன்னுபூ தங்களின் பெருமைபார் சொல்லும்
பூத மைந்தையும் பெற்றது மவற்றினோர் பூதம். (கஎ)
ஓத வெல்லையுண் டாதலி னுய்ந்தில வலகை
போத மெல்லையி லாமையின் மெலிந்தன பூதம்.() ஆ ௬கககை

---

விச்சை.

எக்க ணங்களு மெத்துதி யுங்கொடு
தொக்க ணங்கினைச் சூழ்ந்தடிபோற்றவே. (க)

உம்ப ராதிப ராமும்பர் கைதொழு
வெம்பி ராட்டி யிருந்தரு ளெல்லையில். (உ)

விச்சை யாவையுங் கற்றவிச்சாதர
ணிச்சை யாம்பர விச்சையை நெஞ்சிலே. (௩)

ஆய காலமி துவென வங்கொரு
பேயை வாவென்று பேய்த்தனம் போக்கவே, (ச)

வேறு.

ஆணுடன்பெணலி யாயுடம்புக
ளநந்தமாயதனி லொன்றினெண்
சாணுடம்பினள வாவிருந்தநின்
றன்மைபாரதனி னன்மைபார், (ரு)

மடக்குமாறுமிகும் வானவர்க்குமரி
தாயறக்கடிய வாயுவிற்

கடக்குமாமன னடங்கல்பாரஂ
தடங்கிநின்றதொரு கருமைபார். (சு)

புக்கபூமிதெரி யாதவாறுமுன்
னின்கணின்றபுரை யொன்றிலா
மிக்கபேரிருளொளிக்கஞான நல்
விளக்குவந்துகண் விழித்தல்பார். (எ)

விழித்தியாவையும் விழித்திமைத்துல
கமைத்தளித்தகில மீளவு
மழித்துமூவர்களு மாகிநின்றவது
வாதல்பாரதுவ லாமைபார். (அ)

இட்டதீபமு மிலங்குமெய்ப்பொருளு
மெண்ணும்யாவைகளு மின்றியே
விட்டதீயென விளங்குமாறுமற
விட்டிருந்ததொரு விரகுபார் (கூ)

களிக்கயாவையு மிறந்ததென்றலு
மிறந்ததோர்கரிய கங்குல்போ
யொளிக்கயாவையு முணர்ந்துநின்றபர
மானவொண்கதி ருதித்தல்பார். (ω)

எண்ணவாருமிசை யாதவண்டசத
கோடியுந்தரமு னேதுவாம்

விண்ணையர்திவரு பூகமைமந்தினையும்
விழியினுனது விழுங்கல்பார். (௧௧)

காட்சியாவுமொரு கண்ணதானபடி
பார்கவின்பெற விருந்ததோர்
மாட்சிபார்வசன மானகோசர
மலர்க்கையுற்றமணி யாதல்பார். (௧௨)

மறப்புமின்றியோர் நினைப்புமின்றிமலர்
வதுவுமின்றிமலர் வற்றதோ
சிறப்புமின்றிநிக ரின்றியிப்பொரு
ளிருத்தல்பாரென வியம்பவே. (௧௩)

அலகையாயுழலு மென்னையேயுள
வனந்தவின்பவறி வாக்கினு
யுலகையார்தமி ழெனுருத்தனுமென
வுனைக்கருத்தினி னினைப்பதே. (௧௪)

முன்னையாவெனது கண்டிலேன்மொழி
யிறந்தவின்பவறி வாயினே
னென்னையாணினி வியம்புமாறென
விறைஞ்சிநின்றவனை யேத்தியே. (௧௫)

இந்தவிச்சையுலகத்திலியாருள
ரெனக்குநின்திரு வுளத்தினல்

வந்தவிச்சையென வவனுநாயகி
மலர்ப்பதங்களில் வணங்கவே. (கசு)

அன்னையாதரவி னோடவன்றலையி
னம்புயப்பத மளித்துவந்
தென்னையாளிபர விச்சைவல்லவனை
யாவரும்பணிமி னென்னவே (கஎ) ஆகூ உாஅ.

---

பேயிரங்கல்.

விச்சைகண்டவர்க டொழுகைகண்டில
மிகப்பசித்துவிழி சுழலுமேவம்
பிச்சைகொண்டுணவு மிடுகிலார்களிவை
பேய்களென்றிகழ்வு ்பேசியே. (க)

அண்ணலாரடியர் கொண்டநல்லவற
வேடமாகுமவை கொண்டியா
முண்ணலாமென நினைந்துகொண்டன
மறிந்துகொண்டதிவ் வுலகமே. (உ)

எந்நிலங்களும் விளைந்தவேழ்கடலு
மெப்பொருப்புமுள யாவையுந்
தின்னினும்பருகி னுங்கெடாதுபசி
யென்னருந்துயிது தீருமே. (ங)

வேறு.

தாகமோ கர்திலெலாந் தணிக்குமொரு தனிமருந்திங்
கேகமா முணர்வென்ப ரெங்கள்கணிற் காண்கிலமே. (ச)

அந்தவொரு மருந்தினைப்பெற் றநந்தமா யிரத்தொருவ
ருய்ந்தவருண் டிலையென்ன வோதுவதும் வேதமே. (ரு)

மகனாராப் பெற்றமறை வல்லவரும் பெற்றிலார்
சுகனார்பெற் றனரென்று சொல்லுவதும் வேதமே, (சு)

அப்படியே யரியபொருள் பெறுமவரா ரலகைகளா
மிப்படியே யிப்படியிற் றிரிகின்ற யாங்களியார். (எ)

கற்றெல்லை யறப்பிதற்றிக் கண்குழிந்து கடைகடொறுஞ்
சற்றல்ல யாம்பசித்துத் தடுமாறுந் தடுமாற்றம் (அ)

மழித்துநீட் டியும்பறித்தும் வற்கலைகள் பலபுனைந்து
மொழித்துங்கோட் டிகள்கொண்ட தெத்தனையா முண்ண
[ வே. (கூ)

கருக்கெடுப்போ முங்களைநாங் கழல்சூட்டி யென்றுபோய்க்
குருக்கொடுப்போ மெனிற்கண்டு குதித்தோடிப் போவர்
களே. (ய)

பேசிலோ வல்லவாய்ப் பேயென்பர் பேசுதற்குக்
கூசிலோ ஆமெனனக் கொச்சையெனக் கூறுவரே. (கக)

துதிப்பாரைத் துதிப்பதுவுந் துதித்தாலுந் தம்மையவ
மதிப்பாரை மதிப்பதுவும் வயிற்றுருசாண் வளர்த்தற்கே,

மிகையாகும் பகையிதனில் வேறுண்டோ வுற்றவரும்
பகையாகப் பண்ணுவதும் பாழ்வயிறே யல்லவோ. (௧௫)

இந்தவயி றேபெரிய தேழ்கடலோ பெரியதுதான்
வெந்தவயிற் றுள்ளெரியோ வேலையினில் வடவெரியோ
வந்தனைசெய் துனைவாழ்த்த வைத்தருளாய் வயிற்றினெரிக்
கிந்தனந்தே டிச்சுழலப் பண்ணினைநீ யெங்களையே

உடலெழுசா ணுப்பண்ணி யொருசாணு மொழிப்பதற்குக்
கடலுலகி னுடலமெலாங் காண்பனைக் காண்கிலமே. (௧௬)

பிழைத்தக்காற் பொறுத்தருள்கை பெரியோய்நின் கடனன்றோ; யுழைத்தக்கா லடியோங்க ளுனக்குறுதி யுரைத்தருளே. (௧௭) ஆ ௨௨௫.

வேறு—கனவு.

எனவிளைப்பெலாம்விளம்ப யிரவுகண்ட தொருகனா
நனவெனத் திகழ்ந்ததென்ன வொன்றுநின்று நவிலுமே.
இமைத்ததோர்கணில்லையோவெ ரெல்லையற்ற வல்லையிட்
டமைத்தவோர் மகாந்தகார நின்றியா னழுங்கவே (௨)
விட்டிலங்கு தீபமேற் றிசைக்கணே விளங்கவோர்
மட்டலங்கன் மார்பினொருத்தன்வந் திருக்கவே. (௩)
எல்லையற்ற வன்பதம் பணிந்தியா னிறைஞ்சவே
தொல்லையுற்ற வன்பரென்னை யாளவென்று சொல்லவே. ()
புலன்களிப்ப வந்தசெய்ய பொற்பதங்க ளன்றியே
நலன்களிப்பதென்னையென்று நான்மிகக் களிக்கவே (௫)

தேனுமிக்க பாலுமென்ன நின்றுதித்தி யாவென்முன்
மோனமுத்ரை தன்னிலே யிருக்கவந்த மூர்த்தியே. (௬)

மெய்யெனு நலத்தொடே விழித்தெதன் கணிப்பய
னையைநாடி யருளுகென்ன வறியவோது மன்னையே (௭)

அந்தகார மோகனின்னை யாளவந் திருந்தவ
னெந்தைகார ணன்ப்ரகாச ஞான மிட்டதீபமே (௮)

மோனமா யிருந்ததன்மை மொழியிறந்த வின்பமெய்ஞ்
ஞானமா யிருந்தவேறி லாததன்மை நாடவே. (௯)

மேற்றிசைக்கண் வானவர்க்கு மேலனுத லாலுடன்
போற்றிசைக்கு மன்பர்பாத முற்றபுண்ணி யத்தரே: (௰)

கருத்திலு டொணுதவெந்தை கண்ணிலுட மண்ணின்மே
லொருத்தனாகி வந்தளிப்ப னென்றுவேத மோதுமே. (௧௧)

வேறு.

மரண மும்பிறப் பும்மறு மாமணி
கரண மெல்லாங் கடந்த கடவுளே. (௧௨)

வினவி வந்துநீர் வேண்டிய தேதருங்
கனவு முந்துருக் காரிய மில்லையே. (௧௩)

என்ன வன்னை யிறைவி மறையெலாஞ்
சொன்ன வன்பிற வாளென்று சொல்லுமே. (௧௪)

விண்மு தற்பொரு ளெல்லாம் விளைப்பவன்
கண்மு தற்புலன் காண்டற் கரியனே (௧௫)

முந்தை மூவர்க்கு மூலமு னிவர்தஞ்
சிந்தை யானுந் தெரிதற் கரியனே. (கசு)

வரவு போக்கற்ற வான்பொரு ளென்றுமுன்
பரவு மாமறை யெல்லாம் பகருமே. (கஎ)

முடிவு மாதியு மற்ற முழுமுதல்
வடிவ மாகி வரும்படி யெங்ஙனே. (கஅ)

சொல்லு கோலஞ் சுருதிவி ருத்தமோ
வல்ல வோவென வன்னை யருளுமே. (ககூ)

அருவ னாகிலு மன்பர்க் குருவனாய்
வருவ னென்றது மாமறை காணுமே. (உ0)

பத்தி யாம்வலை யிற்படும் பார்மிசை
புத்தி யாலறி யொண்ணாப் புராணனே. (உக)

தேவி யிப்படிக் கூறத்தி ருவருள்
பாவி யேற்கில தென்றுப தைக்கவே. (உஉ)

ஆக உசஎ.

---

சசிவன்னபோதம்.

அலகை யச்ச மறவக வர்ன்களு
முலகின் முத்திபெ றும்பரி சோதுவாம். (க)

புணர்ந்த பர்வமெ லாம்பரி பூரண
முணர்ந்த ஞானி விழிபட வோடுமே. (உ)

வேறு.

எழிலொரு ஞானி புகழென்னை கூற
வுயர்வீ டிவன்சொல் வழிசெய்
தொழிலாளர் சேர்கை யதுகேளு முன்னை
யிதிகாச மொன்றுசொலவே. (௯)

தந்தாப மற்ற பரனைவல் செய்த
வவனுற்ற பேறுதனைமுன்
செந்தா மரைக்கண் முதல்வர்க்கெம் மண்ண
றிருவாய் மலர்ந்ததிதுவே. (௰)

உவமிப்பின் ஞானி விழிபட்டு முன்னை
வினைவிட்டு முத்தியுலகிற்
றவமற்ற வெய்ய வினையே புரிந்த
சசிவன்ன னெய்துகதையே. (௧)

வேறு.

ஏமம் புகுவா ருளபா தகரா
மியாவர்க் குளுமிக் கவனு குமிவ
ளுமம் புகல்வார் குலமும் மெரிவாய்
நரகம் புகுமா றுநடந் தனனே. (௨)

மலமே வியதீ வினையின் வலியால்
மகிழும் பர்பதத் திலிருந் தவிவன்

குலமே வியதென் புலவா ணர்களுங்
கொடிதா நரகங் குடியே றினரே. (௭)

மிகமே வியபுண் ணியபா வமெனும்
வினையின் பயன்மே லொருகா லமுறு
திகமே வருமென் பதனு லுளரோ
யெல்லா மிவனைச் செறவெய் தினவே. (௮)

தன்புத் திரனே யம்விடா மையினற்
றவறுற் றவிவற் பெறுதந் தையுளந்
துன்புற் றினியென் னைகொலோ புதல்வன்
றுயர்தீர் வகையென் றுசுழன் றனனே. (௯)

ஒன்று லும்வினைத் துயர்துய்ப் பதலா
லொழிவிக் குமுபா யமுனக் கிலதே
யென்று லுமறிந் தவனன் புவிடா
திவனைக் கொடுமூன் றனனெங் கணுமே. (௰)

ஒருமா தவன்மற் றிவன்வே தனைகண்
டொழிவற் றுளவொன் றையுளத் துணரும்
பரமா கியஞா னிகள்கண் ணுறலே
பரமௌ டதமென் றுபகர்ந் தனனே. (௰௧)

தானந் தமிலா ததனைத் தருவான்
சத்தீச் சுரமென் னுமிடந் தனில்வாழ்

மானந் திபரா யணனென் பவனின்
மைந்தர்க் குறுநோய்க் குமருந்தெனவே. (௰உ)

முடியா வுபதே சமிதென் றவனு
முனிவன் பதமெய் திமொழிந் தனனிக்
கொடியான் வெருவா துருயிற் றியநோய்
கூறற் கரிதா யகொடுந் தொழிலே. [௰௩]

ஈங்குன் றிருமுன் பகரும் படியோ
ரிவனெய் தியதீ வினையென் னவெலா
நீங்கும் படிதன் னனுபூ தியினு
னிகழும் விழிவைத் தனனின் மலனே. (௰௪)

கணியா தபவக் கடுவா னதிருக்
கண்வைத் தலும்விட் டனகா துகடும்
பிணியா வையுநல்ல பிதா விறைதாள்
பேணிப் பணியென் றுபெயர்ந் தனனே. (௰௫)

இடனே முதலா கவுவந் திறையோ
னேவும் பணிசெய் திவனுஞ் சிலநா
ளுடனே யிவனே திருமே னிதனக்
குரியா னெனவுற் றனனும் பனுடே (௰௬)

நன்று முனிதாள் வழிபா டதனு
னுறு விதமா னபிறப் பினைவிட்

டொன்று கியவி டுணருந் தமர்கட்
குளசா தனநா லுமுநித் தனவே. (மஎ)

முனிவன் றிருமுன் புளதன் குறைதான்
மொழிவன் சிலவஞ் சலிகுஞ் சியதாய்ப்
பனிவந் திருகண் கள்பதங் களிலே
பலகால் வலம்வந் துபணிந் தனனே. (மஅ)

அருளே வடிவா கியமா முனிதா
னறியா தவர்போ லவழுங் கலுறும்
பொருளே தெனமைந் தனடுங் கினனிப்
பொல்லா தபவப் புணரிக் கெனவே. (மகூ)

வெருவும் பிறவிக் கடல்வித் தாமுன்
வேதா கமகீ தைவிளம் புமதைக்
குருவுந் தனதன் பன்மனத் தளவிற்
கொளுமா றுதொகுத் திதுகூ றிடுமே. (உ0)

வேறு

மரண பவங்களான புனலை யுடையது
மதியை விழுங்குகாம வரவு பெரியது
கரண வொழுங்கறுது விடய விரைநுகர்
கணமொ டியங்குமீன மிகவு முகள்வதே. (உக)

பெருமித மென்றுகூறு பெருமை யுடையது
பிணிகளெ னுங்கெடாத புலவு கமழ்வது
வருமிட ரின்பமான திரைகள் பொருவது
மனமெனும் வஞ்சராஜ மகர முறைவதே. (உஉ

அளவி லகந்தை யாமை யபரிமிதமுள
வவாவெ னிறைந்தவாழ மறிய வரியது
களவு நெருங்குபாரு மலையு முடையது
கலக விடங்கண்மேவு கிருமி நெளிவதே. (உ௩

துகளெனு நன்கலாத நுரைக டருவது
துறவினி னின்பமான கரையை விடவகன்
மகளிரெ னுந்தவாத வலிய சுழியது
மறலியு மஞ்சுகோப வடவை யெரிவதே. (உ௪)

வெருவரு கின்றபோக முதலை யுடையது
விவித மனந்தமான துறையு மறிபவ
ரொருவர் கடந்துபோக விரகி லெழுபவ
வுததி விளம்பயாவ ருலகி னறிஞரே. (உ௫)

பொறிவழி சென்றுமீளு மவல மதிகொடு
பொருசம யங்களாறு மறியவி ழுமதி
லறிவழி யொன்றிலாத பொருள தெனவுள
வனுபவ வங்கமேறு மறிஞ ரகல்வரே. (உ௬)

புணரி கடந்துபோக விரகி லெனமொழி
பொழுது புலம்பியாவி புதல்வ னிறுமுன
முணர்வெனும் வங்கமேறு மறிஞ ரகல்வரென்
றுரையை வழங்கிநாத னுவகை யருளவே, (௨௭)

வேறு.

வாழியென விறைவனடி தொழுதுவரு பவமா
மாழியினை யகலுமறி வருளுகென வவரே. (௨௮)
பரவறிவு மபரவறி வெனவுமிரு பரிசாத்
திரவறிவை யறியுமவர் மொழிவர்தெளி வுறவே. ( )
அபரவுணர் வருமறைகண் முதலகில கலையு
முபரமம தறவுதவு முணர்வபர வுணர்வே. (௩௰)
ஆகமவி தங்களறி வாரபர மறிவார்
யோகமொ டுறங்குமவ ரேபர முணர்ந்தோர். (௩௧)
புராணமிதி காசமெனை யும்பொரு ளனைத்தின்
பிராணனறி யாதுள விடத்திவை பிதற்றே. (௩௨)
இயலறிவ திசையறிவ தினமறிவ துளதா
மயலறிவ தறிவதல வறிவறிவ தறிவே. (௩௩)
நவிலுங்கலை யறுபத்து நாலுமுணர் வாரும்
பவலபம தறுசுத்த பரமமறி யாரே. (௩௪)
ஆகவறி வாளரறி வாரிவை யனைத்து
மேகவறி வாளரிவை யாவுமறி யாரே. (௩௫)

ஐயறி வறிந்தவை யடங்கினவ ரேனு
மெய்யறிவி லாதவர்கள் வீடதுபெறுரே. (௩௬)

மெய்ம்மையறி வல்லதமில் வேறறிவதெல்லாந்
தம்மையறி யும்மறிவதேயறிவு தானே. (௩௭)

பூசனையு மதுசகல பொருளுமறி தமையு
மீசனையும் வேறதற வறிவதறிவெனவே. (௩௮)

தானெனு முடம்பது தனைத்தவிர வேறு
யானெனு மருத்தமுள தோவருளு கெனவே ()

வேறு.

எனதாடை பொன்பூ மகன்றையல் பாய்மா
விபங்கண் முகங்கால்கை மெய்யென்ன வென்றுந்
தனதா யுரைப்பான் வகுத்திந்த வூனத்
தானென் றயர்த்துஞ் சொலத்தக்க தன்றே. (௪௰)

தாளாக வூராழி யாவெந்நில் வீணு
தண்டாக வன்மார்பு தட்டாக மொட்டா
நாளா மலர்ச்சென்னி கூந்தற் கொடித்தேர்
நாணுளு மூர்வானில் வேறாக நாடே. (௪௧)

கடக்குஞ் சரம்பண்ணி யுண்ணின் றொருத்தன்
கைபாத கன்னங்கள் மெய்போ லியக்குங்
கிடக்கும் நடத்தா விடத்திவ் வுடம்புங்
கிடக்கும் மொருத்தன் னடத்தா விடத்தே. (௪௨)

ஒருகூறு மலமாகு மொருகூ றுடம்பாகு
மொருகூறு மனமாகு முண்டற்ற வன்ன

மிருகூறு நீயாகி யொருகூறு நீயா
யிழிக்கும் மலஞ்சோ ரிடப்பட்ட வுடலே. (௪௩)

கிளரா கரத்தூண் ணூறு மன்னஞ் சுடக்கை
கிட்டப் பொருதே யிருந்தார் முனிந்தார்
தளரா துறுப்பொன்று முயிர்போக வன்றே
தழற்பள்ளி மீதே துயின்றார் சகித்தே. (௪௪)

நிழற்பாவை கண்ணாடி யிற்பாவை கைகா
னிமிர்க்கும் முடக்கும் மிவன்செய்யு மெல்லாந்
தொழிற்பால வாமற்றிவ் வுடலஞ்செய் தொழிலுஞ்
சுடர்ஞான வடிவான வன்செய்த தொழிலே. (௪௫)

அறிகின்ற பொருளென்று மறிவானில் வேறே
யாகுலிவ் வூனுகநா னென்ன லாமோ
செறிகின்ற புள்ளல்ல வேகூடிவ் வதையே
செடமான வுடனின்னில் வேறென்று தெளியே. ()

நிலனாகும் வற்பென்ற னெகிழ்கின்ற நீரா
நெருப்பா மிதிற்சுட்ட வெல்லாமு மனிலஞ்
சலமான புரையான வானிந்த வுடலஞ்
சடமான வைம்பூத வுருவங்க டாமே. (௪எ)

விழிவைப்பு மானென்னில் ரவியாதி யாலே
விளங்கின்ற தல்லால் விளங்காமை யாலே
யொழியப் படுங்கன்ன முதனூலு முன்ற
னுருக்கண்ட கண்டன்னை யொப்பாக வுன்னே. (௪அ)

வேறு.

அழலுண்பொருள் களினுண்பவை முக்கூறதின்
றணியென்பு நடுக்கூறது மச்சைக்கணி யாகு [முற்கூ
மெழில்கொண்ட கடைக்கூறது வாக்காயெழு மென்
யெழினுண்மறை யந்தங்க ளிசைக்கின்றன வாமே[றே

உண்ணும்புனல் முக்கூறதின் முற்கூறுவர் நீரா
முதிரந்நடு விற்கூறு கடைக்கூறு பிராண
னெண்ணும்மதி யிருகூறவை நீயாயிடி னன்றோ
விறுகின்ற பிராணன்னது நீயாகுவை யிசையே. (௫௰)

வேறு.

பிராணனு மல்லதுஞ்சி னுணர்வின்மை யாலும்
துணரும் புலன்களொழிவாற்
பிராணனெ தென்னின்மனனை யொழியாது சேனை
நகர்சூழ் வலஞ்செய் பொழுதே. (௫௧)

கரண மொடுங்கவாயு நிகழ்வென்கொ லென்னி
னுடல்காவ லாகுமலதேன்
மரண மடைந்ததென்று தமர்சுட்டி டார்முன்
வளைவாயின் ஞாளிகொளுமே. (௫௨)

இனமுற வெண்ணவுள்ள கரணத்தி லொன்றி
தெனலாவி தென்னதெனலான்
மனமுன மன்னமென்ற வதனாலு மல்ல
மதியல்ல வந்தவகையே. (௫௩)

வேறு.

இடரின் புளதாய் நிலையற் றறிவற்
றெண்ணுங் காணங் களிலா யெவரு
மடரும் பிறவிக் கடியென் றுணரு
மாங்கா ரமுநீ யலவென் றறியே. (ருச)

ஐயப் படலோர் பொருணிச் சயமா
யறியப் படல்யா னெனதென் றுமதஞ்
செய்யப் படல்செய் வதுசிந் தனையாஞ்
சித்தம் மதுவன் றெனநீ தெளியே. (ருரு)

முன்று கவுடம் பதுசித் தமதே
முடிவா கமொழிந் தபொருட் டிறடான்
நின்று கிலநீ யறியும் பொருளாய்
நிகழ்கின் றதனு லெனநின் மலனே. (ருசா)

உன்று லறியப் படும்யா வையுமுன்
னுருவன் றெனவோ தினையாக் குமெனக்
கென்று லறியா தொழியும் பொருளோ
யானு குவதென் றனவென் றலுமே. (ருஎ)

அறியாப் பொருள்கா ரணமா யைகுறித்
தறியும் பொருள்கா ரியமா முலகிந்
நெறியாற் றிகழ்நான் மறையந் தமெலா
நீயன் றெனவோர் துநிரந் தரமே. (ருஅ)

அறியும் பொருளன் றறியாப் பொருளன்
றறிவா கியநீ யெனுமப் பொருடான்

பொறியின் வழிநின் றறியும் பொருளோ
போதக் கண்விழித் தறியும் பொருளே. (௫௯)

வேதப் பொருடா னிதுவே றுசொலும்
வினைபா வையுமன் றொருவே றுமிலாப்
போதப் பொருளாந் தமறைக் கனியாம்
புனிதப் பொருடத் வமசிப் பொருளே. (௬0)

வேறு.

நிமலமாம்பர மதுவெனும்பொரு ணீயெனும்பொருள் சீவனே, யமலமான விரண்டயிக்கிய மசிபதப்பொரு ளாவதே. (௬௧)

அருமையாகிய பிரமமுன்னிலை யாகுமாருயிர் பின்னிலை யிருமையான விரண்ட யிக்கியமெய்துமாறவை னென்னவே. (௬௨)

உபாதியால்வரு பேதமேயிவர் பேதமன்றுரு வுயிரினின் கபாதியாமுடல் போலிறைக்குள காரணாதிகள் காயமே.
ஈசன்முற்றறி வான்வியாபி யெவைக்குமேது வியம்புமா காசகன்னிரு பாதியாவனை காரணாதிக ளாவதே. (௬௪)

நீதியானிரு பாதிநீக்கிட நீயெனச்சொல் பதத்தினு மாதியாகிய தற்பதத்து மசுத்த சுத்த முரைத்துமே. (௬௫)
ஆகமுன்றிக ழேழுநானென னொரும்பதத்தி னசுத்தமே சோகமின்றிய சான்றுநானென னொரும்பதப்பொருள் சுத்தமே. (௬௬)

அகிலகாரண மாதிநானென்ன றற்பதத்தி லசுத்தமே
சகலகாரண சான்றுநானென்ன றற்பதப்பொருள் சுத்தமே
செறிந்தகாரண காரியங்கள் சிதைந்துமேனுறு சித்ததா
யறிந்தவாதனை தானுமற்றதவ் வசிபதப்பொரு ளாவதே.
அசுத்தமாகிய விருபதத்தினு முக்கியப்பொரு ளாகுமே
விசுத்தமான விலக்கியப்பொரு ளென்றுசொல்லுவர் விமல
ரே. (கூகூ)

முரண்டசீவ பரங்கடம்முடன் முக்கியப்பொரு ளாவதே
யிரண்டின்வேறறு சிற்சொரூப மிலக்கியப்பொருளாவதே
ஊக்கியப்பர சீவர்தங்க ளுடம்பிரண்டு மிலக்கணு
வாக்கியப்படி நீக்கிலொரு வத்துவேபர வத்துவே- (எக)

ஓரில்விட்டதும் விட்டிடாதது முபயமும்மென வுணர்வு
ளோர், தேரிலக்கணை திரிவிதத்தி னிசைப்பர்மற்ற தியம்
புவாம். (எஉ)

மஞ்சுகூட்டிடு தென்றல்போலவும் வடபகிரதி யுள்ளதே
விஞ்சுகோஷம தென்றல்போலவும் விட்டலக்கணை யாவ
தே. (எங)

சிவலைநின்றது வெள்ளைபோயின தென்றுசெப்புதல் போல
வே, கவலையின்றி விடாதலக்கணை யென்றுநீகொள் கருத்
தினே. (எச)

மேவும்விட்டு விடாதலக்கணை மெய்ம்மையாதெனி லங்க
வித், தேவதத்த னெனும்பொருட்படி சிந்தைசெய்திடு தீர
வே. (எரு)

விட்டலக்கணை தனையும்விட்டு விடாதலக்கணை தனையுநீ
விட்டுவிட்டு விடாதலக்கணை யால்விளங்கு விளங்கவே. ()

போதுமேவிய தேசம்விட்டொரு புருடனைக்கொளுமாறு
போ, லோதுமீருடல் கண்டுவிட்டதி னுண்மைகாண வுணர்
ந்திடே (௭௭)

வேறு.

பிரியா வுயிர்கா ரியமா முடலும்
பிரமத் துறுகா ரணமா முடலுங்
கரியா கியவா தனையுங் கழியக்
காட்டும் படிகண் டுகொள்கண் ணுறவே. (௭௮)

காணத் திரணிற் பினுமப் பொருளைக்
காணக் கிடையா தவைகை யறவே
மரணப் படினும் மதுகண் டுகொளும்
வழியில் லையெனும் படிநீ மதியே. (௭௯)

எந்தக் காரணங் களுமே வனனு
விதன்வா தனையால் விடயங் களொடே
யந்தக் காரணங் கள்பொருந் தல்கனு
வவைமாய் தல்சூழ்த் தியவத் தையதே. (௮௰)

வேறு.

வினவிற் பரத்தையறி வுறுதற் கவத்தைபுலன் வினைமாறி
யே, நனவிற் சுழுத்திநிலை வரினப் பொருட்டிகழு நலனுக
வே. (அக)

துவிதத் தலத்தைகளை யறிவுற்ற வத்துரிய நிலைசீவனே
யிவிதத் தி னப்புருட னனவுற்ற வத்துரிய நிலையீசனே

அகிலக் கரிப்பரம துரியப் பொருட்டுரிய மதுவாகையே
புகலுற்ற தத்வமசி யெனுமுப் பதத்தின்முடி பொருளா
வதே. (அஙு)

நிமலப் பொருட்சுருதி நெறியிற் பெறக்கருணை நிதிகூறவே
யமலப் பொருட்பெறுத லருமைத் தெனக்கழறி யடிவீழ
வே. (அச)

தமரக் கலைக்களவு தெரிவற்ற தற்பொருள தனையீகுவா
னமரர்க் களப்பரிய பதநற் புனற்கொடுசெய் தபிடேகமே.

பவளத்தில் வைத்தவமிர் தினின்மிச்சி லிட்டினிய பரிவோ
டுமா, தவளப்பொ டிக்கவச மெனவிட் டுடற்பகைக டலைசா
யவே. (அசு)

உதகத்து டற்பொருளொ டுயிர்கைக்கொ டுச்சிமிசையொ
ருபோதொடே
பதகத்த லத்தைவிட விருகைத்த லத்தொடிரு
பதமேவியே. (அஎ)

ஒழியப்பு லக்கணுப நிடதப்பொ ருட்டெரிய
வுளஞானமாம்
விழியைக்கொ டுத்துமொழி யெனமுப்ப தப்பொருளும்
வெளியாகவே. (அஅ)

நனவைத்து வக்கிமுடி துரியத்தை முற்றவிறை
நவினீ திமே
மனவர்க்க மற்றவனு பவமுற்ற சிற்ககன
வலியோதுமே. (அகூ)

புரணமாகவே புறப்புள புலன்களு மந்தக்
கரணம் யாவையும் வழங்கிட நனவெனக் கண்டேன். ()

புரண மாகிய புறம்புள புலன்கெட வந்தக்
கரணம் யாவையும் வழங்கிடங் கனவெனக் கண்டேன் ()

மரண மாகிய திசையிது வெனும்படி மறுதி
கரணம் யாவைபு மிறந்துள சுழுத்தியுங் கண்டேன் (கூஉ)

எஞ்ச லின்றியெக் கரணமு மிறந்திருண் டிருந்த
துஞ்ச லங்குணர் போதமாந் துரியமுங் கண்டேன்.

துரிய மாகிய போதமோர் துளக்கமற் றனைத்தின்
கரிய தாயிருந் திடம்பர னனவெனக் கண்டேன். (கூச)

புணர்ந்த விச்சகத் தொழித்துணர் போதமாந் நனேயே
யுணர்ந்த மற்றது பரன்கன வெனும்படி யுணர்ந்தேன்

சான்று சாக்கிய மிறந்திடத் தானிருந் தமையுந்
தோன்று ருவிடம் பான்சுழூத் தியதெனத் துணிந்தேன்

மரித்த தென்றுணர்ந் துரைத்தது மரித்திடந் தனிலே
தெரித்த போதமே ததுபான் றுரியமாய்த் தெளிந்தேன்

இறையெ னும்பொருட் டுரியமே யென்னையாண் டவனே
மறையி னந்தநற் பதப்பொரு ணனவென மதித்தேன் (1)

பண்டை விச்சுவ வாதனைப் பழுதுபோய் முழுதுங்
கண்ட கண்ணதே யாகிய கனவதுங் கண்டேன். (கூகூ)

காட்சி யாவையுங் கண்ணதா யக்கணுங் கரைந்த
மாட்சி யாகிய வகோசர முறக்கமாய் மதித்தேன். (௱)

அருந்த வாமறை யந்தமா மகோசரந் தனினீ
யிருந்த வாறறி வித்தவா றெங்ஙன மிசைப்பேன். (௱க)

எம்பி ரானிடந் தொறுமிடந் தொறுமது வதுவாய்த்
தம்பி ரானடஞ் செயும்வகை சாற்றுமா றறியேன். (௱உ)

ஆவி யேயடி யேன்செய்கைம் மாறுனக் கென்னெனிற்
பாவி யேனது தானுநின் னுடையதாம் பண்டே (௱ங)

ஆவல் செய்தென தாக்கையுள் ளளவுநின் னடியார்க்
கேவல் செய்வதே யன்றிமற் றென்றுநா னறியேன் (௱ச)

இறவி லெப்பத மும்பெற வேண்டிலே னென்றும்
பிறவி வேண்டுவ னின்றிருப் பணிசெயப் பெறினே. (௱ரு)

வேறு.

என்றுபல கால்விழு மெழுந்தொழு மழும்புரியு
மென்னையினியா
னின்றுபல வாகவுரை செய்தவவ னன்பினொடு
நெஞ்சுருகியே. (௱௬)

எட்டினறி வின்றியிறை தன்னிலறி வின்றியிவ்வு டம்பினு
டனே, வீட்டிலுறை வானையினி வீடுபெறு மென்பது விளம்
புகிலமே. (௱௭)

வஞ்சவலி யான்ரகில் வீழ்பிற ரங்நரகு பாழ்படமிகா
விஞ்சைவலி யாலடைய வேறினர்சு ராதிபர்கண் மேலுலக
மே. (௱௮)

தேவரு மனித்தரு மிவன்றொழில் வியந்துரை செயப்படு
வதோ, மூவரும் வணங்கிமுடி யாலவன தேவல்செய மூங்
குறுவரே. (௱௯)

ஞானியை நரன்சுர னெனுந்தொழிக ஞாலமுய
நாதனருளான்
மேனியது கொண்டுதனை நல்கவரு மென்றறையும் வேதமு
டிவே. (௱௰) ஆக நஙுள.

## திருமுடியடைவு.

மூல மான மறைப்படி மூலமே
கோல மான பரிசுகள் கூறுவாம். (க)

### வேறு.

தன்னாக நல்க வருளே நிறைந்த திருமேனி கொண்டு தன
தாள், முன்னை தேவ ரொருமூவர் சூட விறையா யிருந்த
முதலோன். (உ)

மாதுற்ற பாகனெனவந்து வெள்ளி மலைமே லிருந்துமறை
நா, லோதுற்ற ஞான வடிவைத் திகழ்த்தி யுலகைப்பு ரந்த
வரவோன். (ங)

ஆலத்தி னீழ லறநல்கி ஞான
வநுபூதி யாகவழியா
மூலத்தை நாலு முனிவர்க்கு மோன
மொழியால் வழங்கு முனிவோன் (ச)

வெளியாய் விசும்பி னிருண்மாற வந்த
வெயிலோன் விளங்குமுனநா
ளொளியா யுனக்கு மொளியா னெனத்த
னொளிதான் விளங்கு மொளியோன். (ரு)

தேனொத்த தன்ன தநுபூதி தேவர்
குருவைத் தெளிக்க வொளிசேர்

மோனத்திருந்த படியே யிருந்து
மொழிவற்ற வொன்றை மொழிவோன் (௬)

மகனார் தமக்கு மிகநல்கி யெந்தை வருகென்று தந்தைபணியச், சுகனார் திருத்த முறஞான நல்கி யிடர்தாணொழித்த சுடரோன். (௭)

பேராழி யேறி யடலாழி யேவி யருளாது பொன்றுபிறவிப், பேராழி யேற விசையற்கு நெஞ்ச மிசையப் பகர்ந்த பெரியோன். (௮)

தேனேக்க மன்னு மமிர்தொக்க வேத
சிரமே மொழிந்த குருகைக்
கோனுக்கு வந்து பெருகன்பு நெஞ்சு
முருகக்கொடுத்த குரவோன். (௯)

ஊழிக்க மிழ்ந்த வறன்மேன் மிதந்த வயனிற்சிறந்த மறையோர், காழிக்கண் வந்து சிறுபாலகன்க ளுறுமாறு நின்ற கழலோன். (௰)

இல்லூரு வந்த மடவார் தனங்க ளிடர்நஞ்சு தஞ்ச மிறையோ, னல்லூரில் வந்த பதமென்று நாவி னரசன் றுதிக்க நவில்வோன். (௰௧)

இளையாது பூணு மணவாளர் போல
விளமாதர் கொங்கை யிடையே
விளையாட வீடு மிகுசுந் தரற்கு
விளைவிக்க வல்ல விறலோன். (௰௨)

உரைசெய்ய வின்றி யுளமொன்று வந்த
தெனவாத வூர னிருகண்
டிரைசெய்ய நீர்கொ டுரைசெய்ய வன்று
திருவாய் மலர்ந்த திறலோன். (௰௩)

சித்தான வேட மதுகொண்டு செம்மை
மிருசோதி சித்த வடமா
மத்தான மேவி யறிவான தன்னை
யறிவித் திருந்த வறவோன். (௰௪)

தானந்த மற்ற வருண்மேனி நின்ற
படிநிற்க வன்று தனதா
மானந்த நிர்த்த மறிவித்த தில்லை
நகர்வந் தளித்த வருளோன். (௰௫)

அமரா திபர்க்கு மயன்மா லரர்க்கு
நிகரான வாதி மறையோர்
குமரர் பதிக்க ணொருமேனி கொண்ட
வருண்மேனி நல்கு குரவோன். (௰௬)

நல்லோன முன்னர் வருமங்கை தன்னை
நகரா வுவந்து பிறிது
மல்லே னெனுமை லழியாத தன்னை
யொழியாமை சொன்ன வறவோன். (௰௭)

பூந்தாரு கென்ற மறைவல்ல பூமி
சூர்சொல்ல நல்ல புகழ்சேர்

பரந்தா ருவந்து பரமாம் பதத்தை
யறிவித்தி ருந்த பழையோன். (௰அ)

தன்செப்பு மாறில் பதமன்பர் தங்க
டலையிற் பதித்த மதுரம்
புன்செய்க்கண் மேவி யொழிவற்ற தேசு
புகழுற்ற தூய புகழோன். (௰௯)

சீலம் பொருந்து முனிவோர் கணங்கள்
செயவென் றிறைஞ்ச வறவோர்
கோலம் பொருந்தி நலமார் திருப்பை
நகர்வந் திருந்த குரவோன். (௨௰)

புயமாதர் கொங்கை பெறவேறில் போத
கனமான பாத மலர்பெற்
றுயர்மா தவத்த ருலகுய்ய வந்த
விறையாய் வருக்கை யுறைவோன் (௨௧)

பாரார் வருத்த முறுபந்த பாச
மறவந்து பாத மருடற்
கோரார் வருக்கை யிடமா வுவந்த
நடராச னென்னு மிறையோன். (௨௨)

வெருவந்த தொண்டர் கருவெந்து வீழ
நிறையைந்து வேள்வி மறையோர்
திருவிந்த ரூரி லுருவந்திவ் வைய
மகிழ்வித்த செய்ய திறலோன். (௨௩)

ஆவத்தை மாற வுலகன்பர் தன்னி
னருண்மேனி கொண்டு திருவார்
கோவத்தை மேனி யமுதைச் சுரந்த
நிகர்வேறி லாத குரவோன். (உச)

வேறு

அரணிதரு கனவிஞெளிர் புரணமொரு கரணமற
வயிலவொரு மொழியருளவே
தரணிவரு சொருபமென்ன திடரகல விருகழல்க
டருகருணை பெரியகுரவோன். உரு) ஆ௱௮உ

---

வேறு திருவபிடேகம்.

ஆகியழி யாவண்ண மன்பர்க் கெல்லா
மரியதனைக் கொடுத்தருளு மந்தவாதி
யோகிசொரு பானந்தன் மோகற் காய்ந்திட்
டுங்கள்பசி தீர்த்தருள வுள்ளஞ்சென்றே. (க)

குருவடிவ மாகிவந்த சொருபன் றனை
மைந்தனென வேறுமொரு கோலங் கொண்டான்
றிருவருளா லவன்கொண்ட கோல மான
திருவுருவஞ் சேர்தசெயல் செப்ப லுற்றும். (உ

வேறு

குருவரு ளொழிந்தறிவு கூடலரி தென்பது
குறிக்கொடிலகந்
திருவருளை நாடும்வகை தன்றிருவு ளத்தினருள்
சென்றருளியே. (௩)

தந்தைசொரு பன்கழல் பணிந்துபிற வாதநெறி
தான்வினவவே
மைந்தனுள மன்புகொளல் கண்டருளி யெந்தையு
மகிழ்ந்தருளியே. (௪)

செப்பரிய வீடருள்செ யத்திருவு ளத்தினருள்
சென்றுமிகவே
யொப்பரிய வெந்தைபெரு மானுவகை யோடுமை
துரைத்தருளுமே. (௫)

வேறு.

மாறிலொளி யாய்நிக ழனந்தவறி வின்பம்
வாய்மைவடி வாகிமன் வாசகமி றந்தோர்
வேறில்பொரு ளாயதனின் வேறுபடு பற்றும்
வீடுமில தாகுமது வேதநெறி வீடே. (௬)

கண்ணைமுத லாகியபு லன்களு மியங்குங்
கால்களு மனுதிகர ணங்களு முடம்பும்
விண்ணைமுத லாகவரு பூதமு மனைத்தும்
வேறிலறி வாய்நிகழ்தல் வேதநெறி வீடே. (௭)

கூறுபல பேருடைய வாழுபல வும்போய்க்
கோத்தபர வைக்கவொருத் ÷ தீர்த்தமெனு மா
வேறுபல வானசம யங்கண் முடி விற்போய் [போல்
வேறறவ டைந்தவது வேதநெறி வீடே. (அ)

ஆண்டொரு குலம்மொருப ரிச்சினவு டம்பு
மந்திய சு கங்களுமரு ருந்துதலு மற்றான்
மீண்டொருவ லுந்தவிர வேறுமொரு சூழ்வீழ்
மேலறநி றைந்துளது வேதநெறி வீடே. (கூ)

காலையிறை தன்றலையில் வைத்தருளு போதே
கண்டுகொள லாயுடலி லையுடலம் விட்டான்
மேலையொரு வீடுபுக வென்றுகரு தாமே
வீட்டினி னிருக்குமது வேதநெறி வீடே. (ய)

ஈடுபடு மிப்பிறவி தீரவிறை யோன்வந்
தெழிற்பத மளித்தினி தியம்புமொழி யொன்றால்
வீடுபெறு மப்பொழுதி னெப்பொழுது முண்டே
வீடென விளங்குமது வேதநெறி வீடே. (யக)

களங்கவுட லானபொழு தியாவரு முடம்பாய்க்
காணுமது போலொருவன் வீடது முளத்தே
விளங்குபொழு தெவ்வுலகி லுள்ளவுயிர் கட்கும்
வீடுநனி காணுமது வேதநெறி வீடே.

---

÷ நீத்தம் எனவும் பாடம்.

வேறு. (௰௨)

காதும்வார்தியர்க டாநினைந்தபடி கட்டுரைக்குமது வல்லவீ
டோதும்வேதமுடி வோதலாநுபவ முற்றஞானிக ளுரைத்
தலே. (௰௩)

நாதனந்திபெற நல்கியம்முனிச னற்குமாரர்பெற நல்கவே,
சூதனன்குற வியாதனோதவவ னோதும்வீடடைவு சொல்
லிலே. (௰௪)

ஞானநீதியொடு பெற்றமாதவ ரனேகர் நாளுமள விலலசோ
பானநீதியை யறிந்தினிப்பகரு மாறுதானரிது பாரிலே(௰௫)

வேறு.

உவந்து நாமுனக் கோதிய வீட்டிய
லுபநி டத்தொரு கோடியு ரைக்கிலென்
சிவன்ற னுணர் வுற்றநீ தென்னநற்
றேசி கன்றன் றிருவடி போற்றியே. (௰௬)

இருக ரந்தலைக் கொண்டருள் செய்கென
வேத்து மைந்தனுர் கண்ணீர் வரவர
வருக வென்றவர் தம்மி னுருகியே
மகிழ்வி னெந்தை திருவாய் மலரவே. (௰௭)

மல்கு கண்ணினீர் கொண்டிறை மேனியை
மைந்த னுநம்வி எக்கினர் வள்ளலார்

புல்கி மைந்தனார் மேனிவி ளக்கினார்
போத மாகவொருகணப் போதிலே. (0அ)

உத்த மாபர மானந்த நாடுநீ
யுடைய தேயென் றுரைத்தருள் செய்திறை
அத்த மாநம் பதநினை ந்தயென்று
தூய பண்டைப்படியை விளக்கியே. (0கூ)

உவப்பி னாலிவ்வு லகினை யாள்வதற்
குரிமை யிற்றிரு வுள்ளத்த டைத்திறை
சிவப்பிர காசனெ னுந்திரு நாமத்துச்
செய்ய பாத மணிமுடி சூட்டியே. (உ0)

வேறு

தன்பிறாதியி லாதகோன்முடி யாதிதாண்முடி வாருயிர்க்
கன்பினாருள் கருணைநல்லற மணியுமாபர ணங்களே (உக)

கோட்டமொன்றறு முள்ளமாமலர்
கொண்டுகட்புனல் கொண்டுசெய்
வாட்டமொன்றறு மன்பர்வாசக
மாலையேதிரு மாலையே (உஉ)

ஒன்றுமோதுவ மம்பெருவிறை தந்தவாகம வுபநிடத்
தென்றுமோதுச துஷ்பதத்தரி யாசனத்தி னிருப்பவே

வேறு

அவனி யிற்சிவந் தருசி வற்கதிர்ந்
துபநி டச்சலஞ் சலமொலிக்குமே. (உச)

வருபி றப்பறப் பருதி யிந்துவந்
திருபு றத்தினுஞ் சுடரெடுப்பரே. (உரு)

குணங்களெந்தைநா மங்கள் கொண்டுதாள்
வணங்கி நின்று நாமங்கை வாழ்த்துமே. (உசா)

பங்க யஞ்செறு பதநி னைந்துபூ
மங்கை நின்றுபொ ன் மாரிதூவுமே. (உஎ)

தான சக்ரமற் றுயிர்த னைப்பெறு
ஞான சக்ரமெங் கணுந டக்குமே. (உஅ)

மங்கை பாகநன் மகுட மேறும்வண்
கங்கை யாதிவெண் கவரி வீசுமே (உகூ]

வரர்க ணங்களு மறைக ளுமச்
சுரர்க ணங்களுந் தொழுது போற்றுமே. (௩0)

வேறு.

ஞான கேதனந் தன்னைவ ழங்கிட
நாலு திக்கினுங் கட்ட வவையுமக்
கான கேத மறுக்குமம் பொற்கழ
லடைய வாருமென் றுலித்த ழைக்குமே.

வேறு

ஆருரைக்கவல்லாரவன் றன்பத
மப்பெருந்தகை யிப்புவி மேவிய
கூரிருட்டன வாகத்து மோகனைக்
கொன்று நுங்கள் குறைதீர்க்கு மென்னவே.

திருவபிடேக முற்றும்.
மோகன்சரிதை

மோகனாகுமவ னாரென வவன்றன்வரவு
முனிவருய்ந்திட வவன்குல னடங்கமுனியு
மேகனாமிறை யுவந்தருள்வி வேகன்வரவு
மிருவர் செய்தியும் விளம்புமறை யென்றருளவே)

உண்டு மில்லையு மிரண்டுமல வாகிமனவாக்
குன்ன லோதலரு மாயையுள வுண்மை யுணர்காற்
பண்டு மில்லையிது வந்தபடி சொல்லவுளதோ
பகரு தாகரண மோர்புடைய தேபகர்வதே (௨)

வெய்ய வன்கணுள தாயவன்ம றைந்திடவெழும்
மேக மேயென விளம்பவிர கின்றிமனனுஞ்
செய்ய வின்றியுள வொண்சுடர்முன் மாயைசனனுஞ்
செய்து மூடுமதன் மேனிதெரி யாதவகையே. (௩)

ஓசை யாதியுல கானபரி சொன்னவொருதன்
னிலையி னின்றுணர்வின் மாயையொட விஞ்ஞைபு
வீச ஞகியுயி ராகியுயி ரானவவனே [ணர்வா
டின்ப மாகியறி வின்மையெனு மாதிசையவே .(ச)

அறிவி லாமைபெறு மைந்தன்மன மந்தமனனுக்
கர்ன பன்னிய ரபேட்சையு முபேட்சையுமெனப்
பிறிவின் மோகன்முதல் வந்தன ரபேட்சை மடவாள்
பெறவி வேகன்முதல் வந்தன ருபேட்சையறவே.()

பந்தமா நெறியை மேவிய வபேக்ஷை யைமனம்
பற்றி முற்றுமவன் பெற்றவர்கள் கொள்கவெனவே
யந்த மோகவசு ரேசனர சானவதனு
னறிவி வேகன்முத லானசுர ராறுவர்களே. (சூ)

அவுண ரென்பதடன் மோகன்முத லாமறவரே
யமர ரென்பது விவேகன்முத லர்மறவரே
யிவண மிங்கிருவர் வம்சவா லாறுமெனவே
யென்னை மோகனர சாளவுல கெய்துதுயரே. (எ)

வேறு

ஆனகேத மெல்லைசொல்ல வறிஞரில்லை சிறியான்
மீனகேத ஞதியால் விளைந்தவா விளம்புகேன். (அ)

குடர்வழும்பு தொடர்நரம்பு குருதியென்பு குழுமவுங்
கடல்வழங்கு மயிர்தயிர்ந்த மகளிரென்பர் கவிகளே (கூ)

வேரிவாரி யுண்டுவண்டு ஞிமிறுமிண்டு மடையவேழ்
வாரிவாரி யுண்டவம்பு வாகமென்பர் மயிரையே. (வ)

மயல்கொடம்பை யுமிழநின்ற குமிழியென்று மதிகொளார்
கயல்களென்பர் பிணைகளென்பர் கணைகளென்பர் கண்ணை
யே. (கவ)

துரிசுதுன்று கபம்வழங்கு துளைசெய்துண்ட மதனையே
பரிசில்கொண்டு கவிசனங்கள் குமிழதென்று பகர்வரே (வஉ

மலவொழுங்குண் மலியநின்ற வதரம்விஞ்ச மதனரே
விலவதன்று தளிரதன்ற திந்திரகோப மென்பரே. (வ௩)

பல்லையென்று மென்பெனாது பவளமுட்பொ திந்தகூர்
முல்லையென்று முறுவலென்று முத்தமென்பர் பித்தரே ()

கலர்நிறஞ்செய் வதனம்விஞ்சு கபம்விளைந்த கவினுனர்
மலர்நிறைந்த மறுவொழிந்த மதியமென்பர் மயல்கொடே

மருவிசந்து தொறுமெலும்பென் மதியதின்றி வளைகொ
டோர், டருவுலந்த விளகுமுய்ந்து தழுவிலென்று விழு
வரே. (வரு)

பிணிசெய்கின்ற கழலையென்பில் பிசிதபிண்ட முசிதமா,
யணிசெய்கொங்கை யமிர்தகும்ப மெனவிரும்பி யணைவரே

அபசதங்க ளுபயாந்திர மவை சொரிந்த வறியினு
மிபசிரங்க டடநிதம்ப மெனவியம்பி யிடுவரே. (வஅ)

அரியபாந்த விழியிலன்ப ரதிபயஞ்செர் ளவதோ
பரிபுரஞ்செய் பதயுகங்கொள் பணியுவந்து பணிவரே.()

வேறு

ஓராத வன்ப ருருகாத லென்னை யுரைசெய்தல் யாதுமு
ணர்வோ, ராராத வன்பு மடவார்தி றத்தி னலையாழி யே
ழினளவே. (உ௰)

உளஞ்செய்து கொண்ட மடமா திருக்க
விலைமாதர் தாமு முளராக்
களஞ்செய்வர் காதல் பெரிதாகி யேதில்
குலமாதர் தங்கள் கவினே. (உக)

வேறு

வார்த்தை வேறுசெயல் வேறு வஞ்சமா
மனனும் வேறுபட மாதர் வைகலுந்
தூர்த்த சேவைசெய வன்பு செய்வரே
சுத்த மாமவர சுத்த மாகவே. (உஉ)

உருவ நங்கனனை யார்வ னப்பிலா
ரும்பர் நீசரென லற்று ளன்கொள்வா
ரிரும னஞ்செய்மட வார்த னத்தையே
யிளையர் மூப்பரிவ ரென்று மில்லையே. (உங)

வேறு,

கிறியினிப் பாவையர்க ளுறுதுலக் காடவர்கள்
கிளரவொட் டாதநரகென்
றறியவுற் றுருமுற வணைவதப் பாழுருவி
லருவருப் பானவிடனே. (உச

# மோகவதைப்பரணி

இறுகவப் பாவையர்க டழுவவித் தாசைபக
விரவுழைத் தாவியிறவே
யுறுகவுற் றுலுமிவ ரொழியநிற் போமெனுணர்
வொருகணப் போதுமிலரே. (௨௫)

வேறு.

சீறுவர் யாவரோடு மடவார்கள் காதல்
பொருள்காதல் சிந்தைசெயவே
கூறுவர் வாய்மையல்ல படிறே நினைப்பர்
கொலைசெய்வர் கோபமிகவே. (௨௬)

பாகுதி வந்தொருண்டி பரிவோடு நல்கு
மவரோடு செய்வர்படிறே
யாகுதி பண்ணவன்பொ டணைகின்ற வன்கை
யடுகின்ற வங்கியெனவே. (௨௭)

புற்புதமென்னவிந்த்ர தனுவென்ன வந்திவ்
வுடல்பொன்றல் கண்டுநிறைபொன்
வெற்பதன் விந்துவென்னும் வகைதேடி நாளு
மமையாம லாசைமிகுமே. (௨௮)

நொங்கொரு குன்றி குன்றில் விலைசெய்வர் தம்மை
நுகர்வே நினைந்து நுகர்வர்
வங்கொரு குன்றையொன்றின் மதிசெய்வர் தம்மை
யொருவச்ர பாணியெனவே. (௨௯)

வேறு.

புலைசரிந்த குலனைநின்று புகழ்வதுஞ்செய் துவகையாற், றலை
சரிந்து தொழுவபொன்று தருவதென்று தமதுளே (௩௰)

வேறு.

அருந்தலும் புணர்ப்புமன்ப ரானவான வாசையால்,வருந்த
லென்று முள்ளதாப மாதவத்தி னில்லையே. (௩௧)

வேறு.

பிறன்பொருள் கவர்ந்துகொளு மாறது
நினைந்தறிவு பேசும்வகையே
யறம்பொருளை னுங்கலைகள் கற்பது
மதற்கிசைய நிற்பதுவுமே. (௩௨)

அருந்தவ ரெழுந்துல கடங்கலு நடந்தணி
நடஞ்செயலினே
ரிருந்தவ வுடம்புகொ டிடந்தொறு மிடந்தொறு
மிசைந்திடுவரே. (௩௩)

வேறு.

தெளிய மாதிமுத லெட்டி யோகமுஞ்
செய்து செய்வர் பொருடி வாவிரா
வெளிச மாம்சமது நித்தை மைதுனம்
விடியு மெல்லையினி யோக மேகவே. (௩௪)

# மோகவதைப்பரணி.

சிந்தை மாதரைய லான்ம றந்துமொரு
தெய்வ சிந்தனைசெ யார்களே
தந்தை தாயர்முது குரவ ரேவல்செய
மைந்த ரானவர்க டவிர்வரே. (௩௫)

கொண்ட கேள்வனை யொழிந்தொ ருத்தனொடு
கூடி வாழ்வர்குல மாதரே
பெண்டிர் காதலொடும் வாட வாடவர்கள்
பிறனில் வீழ்வர்பிழை பெருகவே. (௩௬)

ஒழுக்கி லாதவ ரொழுக்க முள்ளவர்
தவங்க ளைப்பழு துரைப்பரே
வழுக்கி லாவறிஞ ரறிவி லார்களென
வறிவின் மானிடவ ரறைவரே. (௩௭)

அரசர் நீதிகெட வாழ்வர் தங்களை
யடைந்த வர்க்கருள்செ யார்களே
புரைசெய் தானையர சரைய மைச்சரொடு
போர்க்க ளத்தி னிறை போவரே. (௩௮)

உறுப யன்சிறிது மின்றி யும்பிற
ரிடும்பை கண்டிட வுவப்பரே
பெறுப யன்கருதி யுறவு கொண்டவர்க
ளிழவு கண்டினி பிரிவரே. (௩௯)

வேறு.

குடும்பச் சிந்தை யொழியக் குரம்பைகூ
றிடும்பை சிந்த நினைவென்ப தில்லையே [ச௦]

உறக்கக் கேட்டி னுளத்த நலன்பிற
றரக்கக் கேட்டி னெரியு மவியுமே. (சக)

பட்ட வாகம் பதைப்பது பார்க்கவே
விட்ட வாவென்ன வேலை விடுவரே. (சஉ)

குமத மெங்கணு மானது கோதறு
சமத மங்க ளொளித்தன தப்பியே. (சங)

மோக முட்டி மொழியிய மாதியா
யோக மெட்டு மொளித்தன வோடியே (சச)

வீட்டின் மேவும் விருப்பம் வெகுண்டுபோய்க்
காட்டின் மேவிக் கரந்து திரியுமே. (சரு)

காந்தி வெஞ்சினக் காயெரி போனது
சாந்தி தாந்தி யிழந்துயிர் தன்னொடே. (சசு)

வேத நான்கும் விளங்கிய வாகம
பாத நான்கும் வழங்கில பாரிலே. (சஎ)

எங்கு முள்ள விறையரு ளின்றியப்
பங்க முள்ளபொய்ப் பாடாண்ட நூல்களே. (சஅ

வர்க்கம் விட்டவெம் மார்க்கமும் வாதுசெய்
தர்க்க மிட்டுத் தடியடி யானதே. (சகூ)

வேறு.

அந்தரமிகவிளைந்தது வன்பருளறமகன்றன
மந்தரமலைமறைந்தன மந்திரவுபநிடங்களும். (௫0)

இந்திரவுலகெனும்படி யெங்கணுமதனனின்புறு
தந்திரநலமடந்தையர் தங்குலமிகவிளைந்தது. (௫க)

மங்கையர்செயும்வ ரம்பறு மங்கலகலகமெங்கணுஞ்
சங்கையைவிடநி லம்பல சங்கரகுலம்விளைந்தது (௫உ)

அந்தியுமரபி றந்தன ரந்தணர்குலகு ளப்புகக்
குந்தியகுளிபி றன்பொருள் கொண்டிடு மபிம தங்கொடு

மூந்தியமறைமொ ழிந்திலர் முன்னெழும்வகையொ ழிந்தி
டப், புந்தியினிடைபு குந்தது பொங்கெரிதிரிவி தங்களும்.

வேறு.

உரைசெய்முறை யன்றிமற் றுழவருண வொன்றறுத்
தரசர்பொருள் கொண்டிடற் கமைவரவர் நின்றழ. (௫௫)

பூசைவர வழிந்திடப் பொருண்முழுது கொண்டுவெம்
பசைவர வழிந்திடப் படர்வரரு வெஞ்சுரம். (௫௬)

அரிகளுறில் வெஞ்சமத் தவரையட வின்றிநற்
பரிகரி யிழிந்துகைப் படைவிடுவ ரஞ்சலில் (௫எ)

சுவணிக ரன்புடைக் குரவர்பொரு ளன்றிலைச்
சிலவணுகி லங்கதிற் சிறிதுகொளல் சங்கையில் (௫அ)

வேறு.

வஞ்ச மொன்று மொழிய வணிகர்த
நெஞ்சி னொன்று பிறிதில்லை நிற்பதே. (௫௯)

அவம்பு ரிந்து திரிவார்க ளந்தணர்
தவம்பு ரிந்து திரிவார் சதுர்த்தரே. (சுஎ)

வேறு.

பாதமோதி யேவல்செய்த பனவரைப் பழித்துநால்
வேதமோதி நீசசாதி விப்ரசாதி யானவே. (சுஅ)

மறையவுண்கை தவிரவின்ப வருளகந்த மதுவெறு
நிறையவுண்டு விப்ரசாதி நீசசாதி யானதே. (சுஉ)

மோகன்சரிதை முற்றிற்று.

---

வேறு.

சொல்லு வானரிது மோக சேனைசெய
லென்ன வேசுருதி சொல்லுவான்
வெல்லு வானவனை யிறைவ ரும்படி
தவஞ்செய் வான்விறல்வி வேகனே. (சுங)

தவத்தி னாற்பெறு விவேகன் முன்பிறைவி
தான்மொ ழிந்தருளு தப்பிரான்
றிவத்தி னார்தொழு சிவப்பிர காசனிரு
செய்ய செம்பொனடி சேரவே. (சுச)

வேறு.

தோர்வி வேகங் கொடுபொரு மோகன்
சுராசுரே சருந் தேயத் தொலைப்பதுந்
தேர விவேகன் சிவப்பிர காசன்
பதத்தின்விண் ணப்பஞ் செய்யும ளவே. (சுரு)

வேறு.

அடிவ ழங்கி னறிஞர்க டம்பிரா
னமரின் மோகனுஞ் சேனையு மாருயிர்
மடியு மென்னு மளவோ வவற்றரு
மனமு மாயுமா மாயையு மாயுமே. (௯௯)

ஒன்று கூறு முபநிட மெம்பிரா
னுருவு கொண்ட துறுதுயர் தீர்க்கவே
யென்று கூற விரும்பசி தீர்ந்தபோ
லின்ப மெய்தி யிருந்த வளவிலே. (௯௭) ஆ௨ ௪௮கம்.

---

வேறு—ஏகன் திருப்பவனி.

ஆண்டானடி யருளெய்தவி வேகனடன் மோகன்
மாண்டானுயி ரென்றங்கொரு விச்சாதரன் வந்தே (௧)
பாதந்தன தலையிற்கொடு பரவப்பழ மறைதேர்
மாதந்தமி லிறைசேவடி வந்தித்து மகிழ்ந்தே. (௨)

வேறு.

என்ற வப்பயனை னெம்பி ரானருளின் மோக னுருயிரிழக்
கவே, வென்ற வப்பரிசெ லாம்வி ளம்புகென வேதொடங்
கினன்வி ளம்பவே. (௩)

வான நாடரும் வித்த ராகவழி தேட வீடுபெற மண்ணி
லே, ஞான நாயகன்ம லர்ப்ப தந்தனை வழங்கு நாளிலொரு
நாளிலே. (௪)

வேறு.

ஓடிவில்பர வின்பமுற வுரியபர விஞ்சைமகள்
கலவியை யுவந்தவரவோ
னடியவர்கள் சங்கதுதி யதிரவணி சங்கமெழ
வறிதுயி லுணர்ந்தருளியே. (ரு)

கண்புன லு மார்வமும் வழுத்துமிசை மாலையு
மழுத்தமுறு காதலடியா
ரொண்புன லு நாண்மலரு மொக்கவிர விப்பரவு
மர்ச்சனையு வந்தருளியே. (சு)

வேறு.

விவேக நாதசிவ போற்றி செம்பொனடி
போற்றி போற்றிசய சயவென
விவேக ஞதிகளு மடியர் தம்மொடு
முனிக்க ணங்களும் விரும்பியே. (எ)

புவியு ளார்மகிழ நீதி ருப்பவணி
போத நின்கழல்கள் போற்றவே
யவியுண் வானவர்கள் யாரும் வந்தனர்க
ளெந்தை காட்சியரு ளென்னவே. (அ)

வேறு.

மேதகு சந்நும் பனிதமு மேயு
மிர்கம தமுஞ்சேர் விடுபனி நீரின்

சேதக முந்தற் சேர்ந்தவர் நெஞ்சிற்
சாந்தமு மெய்யிற் சேரவ ணிந்தே. (௯)

செங்கழு நீர்கொண் டன்பர்செ யும்பூ
மாலையொ டுள்ளஞ் சேரநு ராகத்
தங்கழு நீர்கொண் டன்பர்செ யும்பா
மாலையு மார்பத் தாரவ ணிந்தே. (௰)

ஆருற வாரிங் கயலென வுள்ளத்
தறிஞரு மாயா வகையவ ரோடும்
போருறு மோகன் கிளையொடு பொன்றிப்
போகமி திக்கப் பொற்கழ லிட்டே. (௧௧)

குடிமுழு தாளக் குவலய மேவுங்
குருபர ஞர்தங் கருணையொ டுஞ்சே
வடிமுத லாகத் திருவடி டேகத்
தளவும ணிப்பொற் பணியும ணிந்தே. (௧௨)

சேமிசை யானுந் தூய்மறை நாலுந்
திருநெடு மாலுஞ் செவ்வர விந்தப்
பூமிசை யானுங் காமுறு ஞானப்
போதக மேலே போதரு போதே. (௧௩)

வேறு.

நடுமதி வரப்புவனி தலமதி சயிக்கவொளிர்
நலன்மருவு முத்திவரவே

யுடுமதி யொளிக்கவடி யவர்மதி களிக்கவுய
ரொருகுடை நிழற்றிவரவே. (கச)

சாமர முழக்கவுயிர் சாமர பொழிக்கவல
தாமரையு கத்தினலரூர்
சாமரம னுக்கருகு தாமரை முகத்தியர்கள்
சாமரமி ரட்டிவரவே. (கரு)

விடைகருட னன்முதல லாகவெழு துங்கொடிகள்
பின்புவர விண்ணவரெலாந்
தொடரவரி தென்று * மறைமொழியறிவெ னும்
பெரிய, துவசமுமுயர்த்துவரவே (கசு) ஆ௪கூஎ

பரவுதல்.

இரவிமதி பிரமன்முதல் சுரரவனி சுரர்முனிவ
ரெழின்மறைகள் சயசயவெனப்
பரவிவரு மரவமொடு பரவையென வடியவர்கள்
பரவிவரு பரிசுபகர்வாம். (க)

வேறு.

காதலினுந் துருகியழு மடியார் தங்கள்
கண்ணினின்றும் போராத கண்ணே போற்றி

* தொடர்வரிய தென்றுபல சுருதிமொழி விடுதரு
துவசமுமுயர்த்து வரவே. எனவும்பாடம்

# மோகவதைப்பரணி.

போதலையும் வருதலையு மொழித்து ஞானப்
பூரணமாய் வேதிக்கும் புனிதா போற்றி. (௨)

பொய்யர்க்குப் பொய்யான பூத பேதப்
பொருளாயு மிருளாயும் புரிந்தாய் போற்றி
மெய்யர்க்கு மெய்ஞ்ஞான வநந்தா னந்த
வொளியாகி வெளிப்பட்ட வேந்தே போற்றி. (௩)

ஆதியுமா யந்தமுமாய் நின்றாய் போற்றி
யாதியந்த மில்லாத வமலா போற்றி
சோதியுமா யிருளுமாய் நின்ற தூய
சொருபானந் தச்சுடரே போற்றிபோற்றி. (௪)

அனைத்துலகு நின்பாலா நின்றாய்போற்றி
யழிவாக்க மறநிறைந்த வாதி போற்றி
நினைத்தவடி வாய்நிகழ்ந்து நின்றாய் போற்றி
நினைவிறந்தா ருள்ளத்து நிதியே போற்றி. (௫)

காரணத்தின் காரணமாய்க் கழன்றாய் போற்றி
கண்களிக்கும் படிவந்த கழல்கள் போற்றி
யாரணத்தின் மெய்ப்பொருளா மறிவே போற்றி
யடியவரங் கைக்கனியா மமிர்தே போற்றி. (௬)

கல்லாமை கற்பித்த தாளர் போற்றி
கண்ணிற்கு கண்ணான கண்ணே போற்றி

சொல்லாமற் சொல்லிறந்த பரமானந்தச்
சுடர்திகழச் சொல்லவல்ல சோதி போற்றி. (எ)

ஆவியா யனைத்துயிர்க்கு நின்றாய் போற்றி
யறிவறியா மையைக்கடந்த வறிவே போற்றி
பாவியாப் பாவகத்தி னிருந்தாய் போற்றி
பற்றற்றார் பற்றநின்ற பற்றே போற்றி. (அ)

போகமும்வீ டும்புரக்கும் புனிதா போற்றி
போதுக்குப் போதுநலம் புதியாய் போற்றி
யேகமுமா யநேகமுமா யிருந்தாய் போற்றி
யெல்லாமா யல்லாத விறைவா போற்றி. (கூ)

பாவுமவை ருளத்திருந்த பதியே போற்றி
பந்தமும்வீ டும்படைத்த பரனே போற்றி
யிரவுபக லறவருளு மெந்தாய் போற்றி
யிப்பரிசென் றியம்பரிய விறைவா போற்றி. (ய)

முத்திக்கு வித்தான முதல்வா போற்றி
மொழியிறந்த வானந்த மூர்த்தி போற்றி
தித்திக்கு ஞானகனத் தேனே போற்றி
சிவப்பிரகா சக்கனியே போற்றி போற்றி. (கக)

வேறு,

அன்னையை யினிக்காணே மேயடைந்தவர்க்கமிர்தாய் நின்ற
தன்னையே யளிக்கவல்ல தம்பிரான் போற்றி போற்றி. (யஉ

துய்யசே வடியான் மாயைத் தூகளறத் துகைக்க வல்ல
செய்யசே வகனே போற்றி சிவப்பிர காசா போற்றி. (கங

இப்படி மறைக ளாலும் யாவரும் போற்ற வீச
னப்படி யிலாத பொற்று ளணங்கனோர் வணங்கி வாழ்த்தி

வேறு,

அன்றால முண்டா னிவன்கா ணுமென்பா
ரருளல்ல வோவுள்ள தெல்லா மவன்பாற்
சென்று விரங்கா திரானென்று செல்வார்
தெரியாது பெரியோர்க டிருவுள்ள மென்பார். (கரு)

அளியொன்று தோண்மாலை தரவேண்டு மானே
யஞ்சாது பின்செல்ல யாமார்கொ லென்பா
ரெளியன் கிடர்நல்ல மெய்யன்ப ரோடே
யேத்திப் பணிந்தா லிவன்சால வென்பார், (கசு)

அங்கண்ண னென்பார் திருக்கண்க ளன்றோ
வடிபேணு நம்மாவி யடுகின்ற தென்பா
ரெங்கண்ணின் முன்னேயிவ் விறைவன்க ணின்று
மெங்கே யொளிப்பே மிவர்க்கென் றுரைப்பார். (கஎ)

தனுக்கல்லை முன்செய்த தனிவீர னென்பார்
தன்காலின் வீழத் தடங்கண்க ளாலே
மனக்கல்லை யெல்லாம் வளைத்தாள னேரே
யல்லான்மு னெக்கல்லும் வளையாத தென்பார் (கஅ)

நாமாது முற்செய்த தவமென்கொ லென்பார்
நாமாதி தன்றன்னை நாவார வாழ்த்திப்
பாமாலை சாத்தும் பதம்பெற்று நின்றாள்
பாரீரி தார்பெற்ற பதமென்று பகர்வார். (௧௯)

பொன்மேனி கண்டார்கட் ன்மேனி யாகப்
புரக்கும்பி ரானென்றல் பொய்யன்று மெய்யே
யென்மேனி பொன்மேனி யாய்விட்ட தென்பா
ரிப்பேறு பெறுவார்க ளியாரென்றி சைப்பார். (௨0)

வேறு.

முடியாதப தத்தை யளிக்கு
மொழியாமொழி யாளிப தத்தே
கடியார்மலர் தூய்த்தொழு கிற்பார்
கையென்னத வஞ்செய்த தென்பார். (௨௧)

மரணப்பிற வித்துயர் தீர
மருந்தென்று வணங்கி வணங்கிச்
சரணப்பது மந்தலை வைப்பார்
தலையென்னத வஞ்செய்த தென்பார். (௨௨)

புரணப்பரி பூரணபோதப்
பொன்மேனி புலப்பட நல்கும்
கருணைக்கழல் கண்களில் வைப்பார்
கண்ணென்ன தவஞ்செய்த தென்பார். (௨௩)

பேயாகிய வெம்மையு மாளும்
பித்தாவென வொத்தன பேசி
வாயாரவும் வாழ்த்திரி சைப்பார்
வாக்கென்ன தவஞ்செய்த தென்பார். (உச)

காயாலய மேவியி ருந்துங்
காணுமன் மறைந்துறை யுங்கண்
மாயாவெளி வந்தனை யென்பார்
மன்றுவெளி வந்தனை யென்பார். (உரு)

நீராயுரு வார்துதி செய்யா
நிற்பாருனை யிப்படி காணில்
வாராத பதம்பெற வேண்டேம்
வாழீதென வாழ்த்தியி ரப்பார். (உசு)

வேறு.

தேனனைய சொல்லியரு மாதவரு மிங்ஙனிரு
சேவடிந யந்துசெலவே
வானனைய வன்குமரை மாநகர்வ லஞ்செய்திறை
மாளிகை புகுந்தருளியே. (உஎ)

வடிவுகொடு வந்தவருள் கருதுதொறு மன்பரிரு
மலர்விழி வழங்குபுனலே
படிவதுவு மன்றிமிகு பரிமளக் கந்தமுறு
புணரிடை படிந்தருளியே. (உஅ

இனியவடி யார்துதியெ னமுதசெவி யுண்ணவிழி
யிவர்களுயிர் நுண்ணு மிறையோன்
கனிபவள வாயுலக வமுதொழிப வின்சுவைகள்
கமழடிசி லுண்டருளியே. (உகூ)

மருடரு பவஞ்சிதைய வந்தனைசெய் பூசுரரு
மாதவரும் வேதமெனுமா
புருடனும் விவேகனொடு பொன்மலர்கள் சிந்தியடி
போற்றிட விருந்தபொழுதே. (௩௰) ஆ ருஉஎ.

---

(ஒற்று.)

நியதியுரைத்தல்.

தீர்த்தனைனை யாளிதிரு முன்பிறை பதங்கடுதி
செய்துபணி செய்பவரைய
மேற்றநினை யாரையு மியம்பென விவேகனதி
காரியை யியம்புமவனே. (க)

வேறு.

சுருதி யாயிரமு கங்கள் கொண்டிறைவ
தூய நின்கழல்கள் பாடுமே
மிருதி யாகமபு ராண கீதையிதி
காச மப்பரிசின் மேவுமே. (உ)

அமைய மாறறிய முனிவர் பேணுவது
நின்னை யேயயலி லாமையால்

சமய மாறுமொரு நின்னை யேயிறைவ
தாமு வந்தபடி தாழ்வதே. (ந)

நாளு நாளுநினை யஞ்சி வானமிசை ஞாயி றுதிவரு கின்ற
வெக், கோளு நாளுமுன நீவி தித்தவழி யேந டப்பர்குலை
யாமலே. (ச)

உழலு மாருதமு மிறைவ நின்றுவலி
செய்வ துன்வலியை யுட்கொடே
யழலும் யாவுமடு வதும டைத்தபணி
யென்று நின்னடி களஞ்சியே. (ரு)

வருண னின்றுபணி செய்ய நின்னைமிக
வஞ்சி நெஞ்சினிடை வள்ளனின்
சரண பங்கயமி லாரை யேகொடுமை
செய்வ துந்தரும ராசனே. (சு)

எத்தி யெண்டிசையி லமரர் யாவருநின்
னேவல் செய்யுமவ ரின்பமா
மூர்த்தி நின்பணிய லாது வேறிலது
மூவ ருஞ்செய்துமு டிப்பதே. (எ)

விண்ணு ளாருமவர் கோவு மற்றுமுள
வேறு வேறுலகினி யாவரு

பண்ணு ளாருநினை யன்றி யாவரை
வணங்கு வார்கருணை வள்ளலே. (அ)

வேறு.

ஏகநின்கழ லேவல்செ யாதவ ரில்லையே
மோக னின்கழ லேவல்செ யானென மூர்த்தியே.

ஆ. ருகசு.

தூது.

மோகனெனு மைந்தனை நமேவல்செய வென்றுநல
மொழியவல நியாயமகனைப்
போகவென வங்கவனை யெய்தியவ னேதுமருள்
செய்தவைபொ ருந்தும்வகையே. (க)

உன்னில்வலி மிக்கவர்கண் மோகவர் சேயொரு
சுராசுரரு மில்லையுலகத்
தென்னினு நினக்குறுதி யர்வதுவி ருப்பினெடி
யான்மொழிவ தற்கிசைவதே. (உ)

வேறு.

அழியாத நீதி யறியாத மோக
னவன்வந்து சேர்வ னெனவே
வழியாறி னென்றின் மதியான நீதி
மகன்முன்னி யேவன் மொழிவான். (ஙு)

வேறு.

மங்கையொரு பாகனெடு மாலயன தாலயமு
மாதவர்கண் மன்னுவனமுங்
கங்கைநதி பொன்னிநதி கன்னிநதி யின்னுமுள
நன்னதிக ளின்கரைகளும் (௪)

இயமநிய மாதியெனு மெண்வகை யியோகமு
* முயற்சியொ டியற்றியிடர்தீர்
சயமுனிவ ரானவர்கள் சாந்திமுத லாரொடு
தனித்தனியி ருக்குமிடமும். (௫)

பாதமிறை யோனருளி லேயகில வுயிருருவு
பழையவறி வாவதெனுநால்
வேதமிறை யர்கமபுராணமிதி காசமுடன்
மிருதிகள்வி ளங்குமிடனும். (௬)

தூரதர மானகலை சாரதர மானவை
தொகுத்துமுனி சொல்லியமகா
பாரதமும் வேறுமுள வேதநெறி மாதவர்
பகர்ந்தனவ ழங்குபதியும். (௭)

சாதனச துட்டயநலந்தனை யலம்பெற
வடைந்தவர்க டன்னையறியும்

---

* அருத்தியொடு எனவும் பாடம்.

வேதன விருப்பினர் பொருந்துமிடம் யாவையும்
விவேகனரா சாளுமிடமே. (அ)

என்னுடைய நாதனருள் செய்தவிவை விட்டிதர
பூமிபுகின் மோகவரசே!
யுன்னுடைய வாவியுன தாகுமுறை செய்தி
னுணர்ந்துகொ ளுனக்குறுதியே. (கூ)

காதிவரு மாறுசம யக்கடவு ளாகுமிறை
கண்ணுதல்மு குந்தனயனென்
றோதிவரு தேவர்களு மாகநினை யாதவர்க
ளும்பனவ னென்பதுணரே. (ய)

உதித்தகுல னொன்றிறைவ னுக்கிருதி றத்தவரு
மொக்குமென வோர்பொழுதுநீ
மதித்தலொழி யோர்குல மறம்பெருகு மைவரு
மறம்பெருகு நூற்றுவருமே. (கக)

வேறு.

குவளை யாம்பலர விந்த முற்பல குலங்களேதருச லங்களே
தவளை யாமைசடமுதலை நீரரவு தன்னை யுந்தருவ தன்னி
லே. (கஉ)
தெருளு றும்படி விசும்பின் மீதுலவு திங்க ளுயிறுங்கோ
ள்களே, யிருளு றும்படிய தன்க ணேயுலவி ராகு கேதுவ
வுங் கோள்களே. (கங)

கறுத்த தாயினு நிகர்க்க நின்றில்து
கோகி லத்தினொடு காகம்வெண்
ணிறத்த தேனுமட வன்ன முங்குருகு
நீரில் வாழினுநி கர்க்குமே. (கச)

மலைய முங்கயிலை யிமைய மந்தரமு மலைக ளேபிறவு மலைக
ளே, மலையின் மங்கைகலை திருவ ருந்ததியு மகளி ரேபி
றரு மகளிரே. (கரு)

வேறு.

கங்கை காவிரியு நதிகளே காளி யாறுகளு நதிகளே
மங்கை பாகனுங் குரவனே மற்று ளார்களுங் குரவரே.

நந்த கோபன்மகன் மனுடனே நாட்டி னுள்ளவருமனுட
ரே, யிந்து சேகரனு மீசனே யேனை வானவரு மீசரே.

வேறு.

சொல்லே மறையும் பிறவுஞ் சொலலே
சுடர்மா மணியுஞ் சுரானார் மலையுங்
கல்லே யிறைபே ணும்ஙிவே கனையுங்
கருதா நினையுங் கருதிப் படியே. (கஅ)

கீழ்மே லுளதோ விறைவர்க் கெனினீ
யவருக் கிலகே ட்றுசெய் யமலர்த்
தாண்மேல் விழுமா தவர்மே லவர்கீ
ழவரார் குவர்தா ளில்விழா தவரே. (ககூ)

நீயும் பெருமா னடியே னுதியே
னெடுவா னுலகங் களுநின் னரசே
யாயும் பருநின் னேவணங் குவர்நீ
யறிகின் றிலையெந் தைதனு ரருளே. (உக)

வேறு.

என்று நின்றவ னியம்பவழ லென்னவிழியா
வேக னேவல்செய்வி வேகனர சாளவரவே
நன்று நன்றினிவி வேகனல நம்பகைவனன்
றுதை னென்றிவன்மொ ழிந்தவன மக்கெதிரியே.

மோகன் யானெனது தந்தைமன னிந்தவுலக
மூன்று மென்றனர சாக்கினன்மொ ழிந்தவிறை
னேக னுமவனி னென்னிலிக லிற்குவலியார் [யோ
யாவ ரென்றினி யியம்புகவெ னக்கிசையவே. (உஉ

வேறு.

ஓதியொ ருத்தனல்க வதனத்தை நல்க
வரைமார்பொ ருத்தனுடலிற்
பாதியொ ருத்தனல்க மகளிர்க் கொறுத்த
படைமாரன் யாவர்படையே. (உங)

அரியர னென்றுகூறு மறிவோ ரரக்க
ரசுரேச ரூர்க ளமர்செய்
தெரியெழு வித்தகோப னைதேவ லன்றி
யெவரேவல் செய்வதிசையே. (உச)

சிறியனு மாயிரக்க நெடுமால் சிறந்த
பரமீச ஞனசிவனே
வறியனு மாயிரக்க வடலோப னின்று
வலிசெய்வ தார்சொல்வழியே. (உரு)

வேறு.

அதமன் னசமன் னதன்மன் னசுபன்
னதபன் னபரன் னகிர்பன் னயமன்
மதனுன் மதன்வஞ் சகன்விஞ் சியதுன்
மதிசம் ப்ரமன்மந் தனென்லம் சகனே. (உசு)

ஆகா தனசெய் பவன க்ரமனு
பாசன் னபிமா னியபா யனகன்
சோதர் கரனு குலிதுக் கசுகத்
தொந்தந் தருவிப் ரமனுர் துணையே. (உஎ)

குரூரான் குருநிந் தகனந் தன்மகா
குபிதன் கிர்பணன் குவிர்தன் னவிர்தன்
சோரன் பரிவா திசுகிர்ப் பிசிதன்
சுரவிர்த் தனதி ப்ரமனுர் துணையே. (உஅ)

தேகன் பரதுக் கசுகன் கபடன்
செடிலன் குடிலன் டம்பன் விடயோச்
சாகன் னதிசா கசிகன் னசகன்
சபலன் விபலன் னிவரார் தமரே. (உகூ)

கோரன் வெகுமா னிகுடும் பதரன்
குணாநிக் ரகன்விக்ரகமே வியசிங்
காரன் னவசன் விவசன் கலகன்
கலன்மத் யமனுர் படைகட் டுரையே. (௩0)

வேறு.

அஞ்ஞசன சங்கமனு மார்யசன நிந்தகனு
மந்தரனு மந்தணர்மகா
யெஞ்ஞபரி யாசகனு மான்மபரி மோசகனு
மெங்கள்படை யென்றுகருதே. (௩க)

விந்தியத ராசகனு முன்மத்த தாமதனு
நிட்டுரனு மித்ரசடனு
மந்நியப்ர தூஷகனு மதன்மப்பிர சஞ்சகனு
மப்ரதனு மியாவர்படையே. (௩உ)

அநர்த்தவிட யத்திலநு போர்தனெனு நீசனு
மநர்ச்சகனு மிந்திரியகனு
மநித்தியசுக சங்கதனு நித்தியசுக வர்ச்சனனு
மாகுமிவர் யாவர்படையே. (௩௩

பயப்ரதன் மகாசனபராயணன் மலன்பர
தனக்கிரகண பண்டிதனொடே
யயக்யனு மெசப்பரி நிவர்த்தகனு மஞ்சனு
மசூச்சனனு மியாவர்படையே. (௩ச

மனோரதனு மத்ருவனு மாதுர்பிதிர் வஞ்சகனு
மச்சரனு மாதருடனே
விநோதனு மசற்பரனும் விவாதனும் விகற்பனும்
விதர்மகனு மார்விதயரே. (௩௫)

வேறு.

அதிப்ர தாபனு மதிப்ர மாதனு
மநர்த்த யேதுவு மபத்தனு
மெதிப்ர கோபனும் வெகுப்ர லாபனு
மிருக்க யாரெனை யெதிர்ப்பரே. (௩௬

அநேக சாகசன் னித்திய வர்ச்சன
னீதி வர்ச்சன னித்திய சேவகன்
றேக போஷணன் போக பூடணன்
வேத தூடகன் யாவர் மீசனையே. (௩௭)

வேறு.

சுற்பி பாசா பரவசன் றுர்ச்சனன்
சுத்ர கன்மன் குதர்க்கன் கிருதக்ன
னற்ப சார னனந்தருக் காகர
னநிர்த னிந்தக னுர்துணை யர்வரே. (௩௮)

அப்ர சன்ன னசுசிய சாந்தக
னசற்ப்ர லாப னநித்ய நியமிதன்
விப்ர தூடகன் வேதப ராமுகன்
விடய சம்முகன் யார்படை வீரரே (௩௯)

பிராண யிம்சா பரன்பர தார
பான சூயா பான்கர ஞசவாக்
கிராண ஞசா பான்பர தந்திர
ஞட்சே பன்ஞத்தி கன்ஞர் கிளேஞரே
தூட ணன்னதி கண்டக னிட்டுரன்
றூர்க்க மன்றுக்க சிந்தகன் றாடஞ
பர்ட ணன்பர போகவி வர்ச்சகன்
பஞ்ச பாதகன் யார்படை வீரரே. (சக)

நிலையி லாமதி மானவி வேகியா
நிதம்ப னிஷ்ப்ரியன் விக்ரக னிக்ரக
னலைய ருதசம் ப்ரமஞ ரம்பக
னவய வத்தித ஞர்படை யாவரே. (சஉ)

வேறு.

உய்ந்து போக வுபாயமுண் டேநமக்
கைந்து பூதமு மென்படை யல்லவோ (சஙு)

வேறு.

தேவர் வென்றிலர்பு லன்க ளைந்தினையு
முனிவர் வென்றிலர் சிறந்துளோர்
மூவர் வென்றிலர் சகத்தில் வென்றவர்கள்
யாவ ரென்றினி மொழிந்திடே. (சச)

வேறு.

என்ப டைப்பெருமை தானுமிறை யோனுமுனி
யாரு மிங்கறிவ ரெண்ணமில் விவேகவாசன்[வே

றன்படைப்பெருமை யானறிகு வேனதறியான்
முன்வரச்சொலிறை யைக்கொடுபொரச்சமரமே
தூது முற்றிற்று. ஆ௨. ருஅக.

---

மோகன்படையெழுச்சி.

அறிவிலாமதிவிவேகனொடைவன்றலைவனுக்
கறியவோதெனவிடுத்தவனை மோகவாசன்
குறியிலாமைகிளர்காமனுடனெண்ணவருவெங்
கோபலோபர்படைகொண்டெழுக வென்றபொழுதே.

வேறு.

எமைவிடுமெமைவிடுமெனவுரைத்துவே
லெனவிருகணையெனவிழிசெலுத்தியே
சமைவர்களரிவையரொருகணத்திலே
சதுமறைமுனிவர்க * டவமழிக்கவே. (உ)

ஓடிபடமுனிவர்தம்விரதமுற்றுரு
துலவுவரொருகையொடொருகைதட்டியே
வெடிபடுதிருநகைநிலவெறிக்கநீள்
விழிசுடரிருகுழைவெயிலெறிக்கவே. (௩)

துடியிடையினுமிகுமிருகவத்தினேர்
துணிபுறவிணைமுலைமலைதொலைக்கவே

---

* தவமிழக்கவே எனவும்பாடம்.

யடியிணை பணியுமி தழகுரு மக்களை
வணிபரி புரவரி யொலிய ழைக்குமே, (ச)

சடைசில புனையினென் மயிர்ப றித்திது
தவமென வுடைதவி ரினென்ம ழிக்கினென்
னுடைசில புனையினெ னுடைநெ கிழ்த்துமுன்
னுலவிய மகளிர்நம் முளன ழிப்பரே. (ரு)

புலவிய லொருவிய புனிதர் புத்திகூர்
புலவியி லழிவகை புரித லுற்றுநீள்
கலவியின் விழவடு கரிம ருப்புநேர்
கனதன வரிவையர் கலக மிக்கதே. (சு)

குருகெழு தடமல ருகும ணற்குவால்
குயிலக வியபொழி லிசையிளைத்தகா
லுருகெழு மலரணை நிலவு முற்றுமோ
ரொருபடை முனிவரை புணர்வ ழிக்குமே. (எ)

வேறு.

கோங்கரும்பு முலைமடவார் சூழ்போக வேண்மகரக்
கொடிமுன்போகத்
தீங்கரும்புச் சிலைமலரும் படையெடுத்துத் தென்றற்றேர்ச்
சென்றபின்னே. (அ)

இடிபோலு மிகற்றேர்மே லெழிற்படைகொண் டெரியெங்
கும் கொளுத்தித்துமக்

கொடிபோகச் சொடுமைகொலை பழிபாவஞ் சூழவெழக்
கொடியகோபன். (கூ)

வேறு

ஒழிவறு புணர்வை யுளத்துளே
யுடையவர் தமையு மிமைப்பிலே
யொருவரொ டொருவர் சலிக்கவே
யுடலடு மமரை விளைக்கவோ
வழிவறும் விரத மழிக்கவோ
வருமறை நெறியை யழிக்கவோ
வணைபவர் தமையு மொறுக்கவோ
வதிபய மிகவும் விளைக்கவோ (ய)

அகலிட முடிய விடிக்கவோ வசலமு மலைய வலைக்கவோ
வலைகடல் சுவற வெரிக்கவோ வமரர்க ளுலக மழிக்கவோ
விகலெனு மெரியி லழற்றியா றிருபரு திகளு மொளிக்க
வோ, வெரியினு மழல விழிக்கவோ வெனவிங னிளைஞ
ரிசைக்கவே. (கக)

வேறு,

ஆசையின்ப மேவிமீள்வி லாதகாத லாகுதே
ரோசைகுன்ற லோபனேகு மாண்மையர்வ ரோதுவார்
புகைப்புகா விடங்களும் புகுந்துதன்னை யாவருந்
திகைக்குமாறு நிற்கவல்ல தீரனிந்த வீரனே. (கங)

செய்தவங்கொ டைக்குலஞ் சிறந்தகல்வி செப்பல்போய்க்
கைதவங்க ரப்பிரப்பி வன்படைக்க லங்களே. (கச)

வேறு

மதமாச் சரியா திமகா ரதரோ
டொருவற் குளதாம் வலிசேர் படையின்
விதமார்க் கியலுஞ் சொலமே லெழின்மேல்
விண்டென் றிலநிற் பதுமே தினியே. (௬௫) ஆகூ ருசுசு.

வேறு.

மோகனெழுச்சி வஞ்சி.

எள்ளின் றுணையும் புரையற் றுலகு
மெஃகும் மிருண்மூ டெழும் படையின்
வெள்ளம் பகரும் படியோ வினியவ்
விறன்மோ கனெழுச் சிவிளம் புதுமே. (௧)

ஒண்முத் தன்மலர்க் கழலிற் பணியா
வொருமுத் தனுவந் தமடந் தையர்தங்
கண்முத் தணியத் தடமார் பணியுங்
கதிர்முத் துவடங் கள்கவின் பெறவே. (௨)

காலிற் கழியார் முனநாள் பரமன்
காலிற் கழியாது கழிந்துயிர் போங்
காலிற் கழுகுண் டுவிடப் படுதன்
காலிற் கவினக் கழல்கட் டினனே. (௩)

மன்னுந் தவமும் புகழும் மரபு
மாறு வருளும் மணியா தழியும்

பொன்னுந் துகிரும் மணியும் பணியும்
பூணொன் றுநினைந் துபுனைந் தனனே. (௪)

வேறு.

அத்தற்ப தப்பொருளி னற்பொற் பதத்தையறி
வற்றுப் பொரக்கடவனு
மத்தப்பிர மத்தனினி மற்றுப்பொ ருப்பிலதென்
மத்தக்க ளிற்றின்வரவே. (௫)

வேறு.

வருபிறவி மாறவல குரவனடி பேணுமிது
வொழியமதி மாறுபடுவோ
னிருபுறமு மாரவரு கழுகிறகு போலவரு
மிருகவரி வீசிவரவே.

வேறு.

மதித்தொரு தனக்குள நலத்திணையு மற்றவர் வழுக்கிணையு
மே, கதித்திரு புறத்தினுமெ டுத்துள தனிக்குடை கவித்
துவரவே. (௭)

அழுக்கிளைஞ ரின்புறு மணப்பறை கணத்தது பிணப்பறை
யுமா, முழுக்கிணை யறிந்துமறி யாவரசன் முற்பணை முழக்கி
வரவே.
கூற்றன மதக்கரி கொடிப்புய லணிந்துவரு குன்றனைய
தேர், காற்றன கடும்பரி நெருப்பென வமைக்கடல் கடுப்ப
வரவே, (௯)

வேறு

எச்சில்காண லாவடிசி விட்டவாழி கான்மறைய
விட்டநீறு மார்நிறைய விட்டபூணு நூலினுடன்
மிச்சிறுநு ணுவிரத விப்ரதீப னுமனென
வித்தைசால வேகுலவு விப்ரர்கோடி சூழ்வரவே. (௰)

இட்டவேசி மார்கள்பெறும் வித்தையாசை யாலகல
வெக்யசாலை கோவியதில் யக்ஞமாண ராய்வடிவு
சிட்டவேட மாகமுடி தர்ப்பமாலை யோடுவெகு
செற்பவாய ராகிவரு விப்ரர்கோடி தேவர்வர (௧௧)

அப்ரகாச மாகவிடு மக்குமாலை யாபரண
வச்சிமார்கள் பானமதி லப்ரபோக ராயதிக
சுப்ரகாச நாமமொடு சுத்தமான ஞானபரி
சிட்டர்போல வேவருவர் கட்டசோர வாமிகளே. (௧௨)

உட்கியாரு மோடும்வகை நுட்கசூல வேலரிண
முற்றகோடு தாமிருகை பற்றியோடு வார்மனிதர்
கட்கிஞ்த கோலமொடு கட்குவாஞு ணுவெதிர்
சுக்குவாய ராகிவரு கட்டவேட தாரிகளே. (௧௩)

இத்தியாகு மாகநல செக்காடை மூடியுடல்
சிட்டராகி மேவினவர் சித்ரநாரி மார்களொடு
புத்தியாகி யேபுலவு புத்திநாடி வீடுதொறும்
புக்கபூசை போல்வருவர் புத்தகூட வேடர்களே. (௧௪)

இட்டநீறு காணிலெதிர் மூட்டெனுவ டாவகைசெய்
யட்சசாத னமுகம திட்டுவாதி யாமுதிய
கட்டமான நாரியர்கள் பக்கலாசை கூரவதி
கட்டமாக நாறுமரு கத்துராலர் சூழ்வரவே. (கரு)

ஆ. சூரமெக.

விவேகன்படையெழுச்சி—காஞ்சி.

இப்பரிசு மோகவர சன்படை யெழக்கடிது
சென்றிறைவர்தஞ்
செப்பரிய சேவடி பணிந்திறைவர் தூதனுரை
செய்தபொழுதே. (க)

வேறு.

சிறிது சிவந்தில திருநய னங்களோர்
சிறுநகை கொண்டிறையோ
னறிது மவன்படை யெனவுல குண்டருள்
பவள மலர்ந்ததுவே. (உ)

அதிரத முங்கட கரிபரி யும்பரி
வாரமும ணிந்தெழுமே
யெதிரெதிர் முந்திடியொ ரேதில வன்படை
யெழுகவி ரைந்தெனவே. (௩)

இறைவன் விடும்படை யுடன்மன மைந்தனு
லிவனெனெடு மும்படையு

ழுறைபிட னின்றில வளவறி கின்றில
வுபநிட தங்களுமே. (ச)

வேறு.

பாகெனுமொழியவ ராகமுறவரி பாசமிறவற வீசியே
காகமவருட லேறவிருவகை நாதன்மதகரி காணுமே. (ரு)
உலகிலொருவரு முணரும்வகையற வுயர்வதறவுயர் வுடையவர, யிலகுமொருபது திசையுமிகலற விடுமெவ்விறையவ ரிரதமே. (சு)

வேகமிகுபகை வீரர்கலற மீளவடியினில் வீழவே
மாக்முடியினும் வீரர்நினைவினில் வாளிவிடுமிறை வாசியே
தாவுபலபரி வீரர்பொரவெதிர் சாரிலவர்தலை சாயவே,மேவிமையுறு போதினுடலுயிர் வேறுசெயுவல வீரரே. (அ)

இருமை யையுமிற வெறியு மிறையடி
யவர்கள் குணமுறு மேலெனுற்
பெருமை திறல்பொறை வலிமை யளிவெளி
யொளிமண் வளிபுனல் பெறுவதே. (கூ)

வேறு.

வினையை நீறெழவி ழிப்பரேபிறிதில் வினைபெ லாமிற மிதிப்பரே, நினையு மாறறவெ திர்ந்த வாருயிரு நீரெனப்பரு கிநிற்பரே. (ώ)

யாகனு மெல்லியும்வ ரம்பிலாவுலக னைத்தையுந் திசைகள்
யெத்தையு, மகில பூதரையும் வாரிமேயயில வல்லவோவொரு
வன் றாமுமே. (கக)

அண்டகாரணமு மாவிகாரணமு மாதி காரணமு மகிலமுங்
கண்ட காரணாடங்கவேவொடு மறுப்ப ரேயொருக ணத்
தினே. (கஉ)

ஒரோர் ருத்தருணர் விற்குறைக்களவி டப்படாதவுரு வுடை
யரோ, பரோரா ருத்தவிள வொப்பர்தம்முடைய நாயனொரு
வ னன்றியே. (கங)

வேறு.

கூற்றையோ விலக்குவது கொடியவர்வெங் கூற்றினையே
காற்றையோ நிறுத்துவதுங் கடியமனக் காற்றினையே. ()

சிலைகளையோ வளைப்பதுதான் வன்னெஞ்சர் சிரங்களையே
அலைகடலோ தூர்ப்பதவ ரளவில்பவக் கடல்களையே (கரு)
அல்லையோ பகல்செய்வ தறிவிலா ருளத்தினையே
கல்லையோ கனிசெய்வ தவர்கண்மனக் கல்லினையே (கசு)

கொல்விடமோ நுகருவது கொம்பனையார் தம்போக
வல்விடமே நுகர்ந்தாலு மயங்காம லிருப்பர்களோ. (கஎ)
படநாக மோபூண்பார் பார்வைமுத லைம்பொறியாம்
விடநாக மைந்தினையும் பூண்டென்னை யாடுவரே. (கஅ)

கொழுங்கனலே வளிக்குமது கோபமெனுங் கொடுங்கன லே, வழங்குவது மழிபொருளே மறைதேடும் வான்பொரு ளே. (கக)

அடலின்வரு மவ்வொழியத் தாழ்விப்ப தடியரையே முடலிட்ட லோவருப்ப தின்மூல வுயிரினையே. (உ0)

உரியகலை வடிவர்க டம்பெருமை நம்முணர்விற் றெரியுமென யாஞ்செலிய சிறுமையே சிறுமையதே. (உக

வேறு.

அல்ல தங்கவர் பெருமையை யருமறை மொழிய வல்ல தன்றமன் முகுந்தனும் பிரமனு மாட்டார். (உஉ,

இடையி லாரறிந் துரைப்பவர் தாமினி யிவரை யுடைய நாயகன் பெருமையை யோதுவர் ருளரே. (உங

வேறு.

நம்ப னல்லடி யார்புடை சூழ்வர நாப்பணே செம்பொன் மாயணி வைதிகத் தேர்மிசைச் செல்லவே என்ன ரந்தைகெ டும்படி செய்தரு ளெம்பிரான் முன்ன ரந்தர துந்துமி யெங்குமு ழங்கவே. (உச)

கலைக டந்தம திநிக ரல்ல கவிகையவ் வலைக டந்த மதிநிறை வேதிக ராவதே. (உரு

இவணை மென்றெழு தற்கரி தாமெழி லன்னமே
றவனை மூன்றொழு ஞானநெ றிக்கொடி யோங்கவே. (உஎ)

காம னும்படை யுங்கெடக் காணுநி ரூபக
நாம னும்படை யுஞ்செறு மெங்கணு நாடியே. (உஅ)
பொறையு மின்சொன் முதல்வரு தானையும் போகுமே
யறையும் வெஞ்சின மும்படை யுங்கட் டழியவே (உகூ)

வேறு.

தோஷா கரனு மியமேச பனுடன்
றுயரப் படையுந் தொலையும் படிசந்
தோஷா திகள்செல் வமதா திகளுந்
தொலையப் படைசெல் வகைசொல் லுதுமே. (௩௰)

அமதன் சுகன்மௌ னியசிந் தகனப்
பிரதிகூ லனதிட் டபரன் னியமன்
யமனின் மமனின் மலனித் தியபரன்
யஞ்ஞன் யதிபூ தகிதா க்ரனே. (௩௧)

பிட்சா சனன்வை திகதன் மன்மகா
பெலனிந் தியநிக் ரகனுக் ரதபன்
னட்சா சனவே கனகேர் வியநா
யாசன் கிர்தகிர்த் யனநிந் தகனே. (௩௨)
தன்மன் சுகிர்தன் சுகிர்தஞ் ஞனசஞ்
சலன்வீ ரியனபிஞ் ஞனசம் ப்ரமனிட்

தன்மன் கவிசந் திகிர்பன் சுகுணாக்
கிரகணன் பல்வன் மவிவர்ச் சிதனே. (௯௩)

வேறு.

அவர்தியப யனசுலப ஞத்திக னவிக்ரகன்
சின்மய னித்தியவிரதன்
சிவாதிபரி பூசதர னகிர்பண ஞரதி
சீலனதி தாகசமனே. (௯௪)

பாவகன யிஞ்சகனி வர்த்தனன கனவிசன
வர்சிகுரு பக்மபகசச்
சேவகன கிட்டுரன் விரத்தனவ தானனதி
தீரனதி நிச்சலனுமே. (௯௫)

உத்தமன் சேவகனு தாரனல சாசனி
சுதர்ரனப ரிக்ரகன்மகா
சத்தியபர னிற்பிருகன் மிதாசன னடம்பனவி
காரிகுணி சத்யதபனே. (௯௬)

சுமந்திர னசலன் னகலன நமிமானி
சுகதன்சு மனசன் சமன்
நமனமச் சான்விசுத் தன்னரக னற்சுபா
தானமிர்த சங்கிர கனனே. (௯௭)

வேறு.

அருபன் னித்திய னநித்திய நிருபணான்
சொருபன் சுத்தன் சுதந்த்ரன் சுவசனே. (௩அ)

வேறு.

விபரீத பரன்னாக ருயன்
விவகார பராமுக மித்ரன்
னபாராத கினன ஞோங்க
னசோகன்பல சாதன னப்ரமனே. (௩௯)

வேறு.

எந்தப் படையுண் டிகன்மோகர்க் கெழிலார் விவேகர்க்
கோரொருவ, ரந்தப் படையைத் துணித்தடுக்க வல்லா
ரிவ்வா றநேககரே. (௪0)

வேறு.

பாதமுதல் வன்றர நிகழ்ந்தபரி பூரண பகர்தனிலெலாவைம்
பூதமு மறைந்தற நிறைந்துபடை நின்றநிலை யென்புகல்
வதே. (௪௧)

செடிதரு முடற்கொடு மனித்தர்கடி வத்தன
மெனக்களி மிகுத்தனர்சிவ
னடிதரு நலத்தன மெனச்சுரர் களித்தனர்
நிலத்தவ ரடித்துகளினல் (௪௨) ஆகூருகூ.

விவேகன் படையெழுச்சி முற்றும்.

தொந்தயுத்தம்—தும்பை.

சந்தி யாதமு னிரண்டுபடை யுங்குதறுபா
ஷண்டர் சங்கமதி ரச்சகல வேதமுடனே
நிந்தி யாமிருதி யாகமபு ராணவிதிகா
சாதி சங்கமொரு கோடியெதிர் நின்றதிரவே. (௧)

வார மாகவொரு மோகனர சாளவெனவே
வைத்த வந்தமன மன்னனொடு மாயையுடனே
யார மார்முலை யவிஞ்சைமுத லாக்கினவரே
யூழிய வும்படை வகுக்கும்விர னாறிவரே. (௨)

ஆயு மாறரிய மாயைமுத லெண்ணவரிதா
மகில சேனையுயி ராகியவை யங்கொழியவே
வீயு மாகினும் விவேகன்விடு சேனைபொருதா
வெற்றி கண்டுவிளை யாடலை விரும்பிமிகுமே. (௩)

மாளு மோகனை விவேகனழி யென்றுமனனு
மாயை யுந்துணிய வாளுமிரு காலுமுடையான்
வேளும் வேகனு முலோபனு முனைபடைபோய்
வீய வேநிருப காதிபடை யேவிவிடவே. (௪)

இலங்கு மெய்ம்மைகொடி யாகவுள தேரினமன
மென்னும் வாள்கொடு நிருபக னடக்கவெதிரே

கலங்கி நம்மடியில் வீழும்வகை சூழ்குவமெனக்
காம வேள்விடு கொடிப்படைக ளித்தனவாமே (௫)

ஊனமுள்ளன வொழிப்பவர்க ளாகியுடன்மே
லுள்ள குற்றமுறை யாமலுரை செய்வரதனன்
ஞானமுள்ளவர் விளங்கவரு நம்படையினின்
ஞானிமார்படை நமக்கென நகாமொழியுமே. (௬)

வேறு.

தூற்றியவர்கட்டி னுமது தோன்றாமற்
போற்றியவர்ப்பேணும் புல்லர்க்குச் சொல்லுவாம். (௭)
நீராட்டி வந்தவர்க ளன்றோ நிரந்தரமா
வேராட்டி வந்தமண மெல்லாம் வெளியிட்டார். (௮)
காம்பட்ட தோளியர்க ளன்றோவிக் காயத்தைப்
பூம்பட்டி னன்மறைத்துப் பொல்லாங் கறிவிப்பார் (௯)
நாவி யொழுக வருவார் நடைப்பிணமென்
றாவி யொழுகுவதன் முன்னே யறிவிப்பார், (௰)
காயிலை கத்தூரி கருப்பூரங் கொண்டன்றே
வாயின் மணத்தை யறிவிப்பார் மாதரார். (௧௧)
புல்லித் துறக்க வறியாரைப் புல்லியவே
சொல்லித் துறப்பிப்பார் தூய்மொழியா ரல்லோர். (௧௨)
பந்தக் குரம்பைப் பழுதெல்லாம் பாரோர்கட்
கெந்தக் குரவ ரிவர்போ லறிவிப்பார். (௧௩)

வேறு

இலகுமுத்துச் சுடுபுறத்துப் படுபவெற்புத் தொடர்களே
கலகமைக்கட் கணைகளப்பிற் குமிழியொத்துக் கழிபவே.

முருகுபுத்தப் புதுமலர்ப்பொற் புறமுடிக்கிற் கமழ்வதே
கருகுகற்றைக் குழலொடுக்கிற் பழையசிக்குக் கமழ்வதே ()

அணியின்மிக்குத் திகழ்தனப்பொற் பருதிகழ்க்கிற் றசை
களே, துணியினத்தொக் கணுவிழிற்சற் றதுபுழுத்துச்
சொரிவதே. (கசு)

உடைமறைக்கப் படுமழுக்கப் புடனொழுக்குத் துளைகளே
கடகளிற்றுச் சிரமென்மத்தக் கலிகள்கத்தக் கடவதே. ()

அடிதொடக்கிச் சுரிகுழற்கொத் தளவுபுத்திக் கருவரா
விடமொரொட்டுத் தளவுகிட்டிப் புகழும்பெறத் தனையுமே.

புலவுகக்குப் புழுமலப்பையைப் புறமறிக்கிற் புவியிலார்
கலவியுற்றுப் பெரிதுவக்கக் கடவர்சுற்றிக் கழுகலால். (ககூ)

துரிசுரைத்துப் பரிசின்மைக்கப் படையைமுட்டத் தொட
ரவே, தெரிசனப்பொற் றிகிரியுட்குற் றணர்கருப்புச் சிலை
யரே- (உ௦)

வேறு.

புணர்விற் கானநிலாமதி புகுதக் காணுயர் மேனிலை, புன
ன்மிக் கார்தட மேவிய புளினப் பூதர நாண்மலர், மணமிக்
கார்குளிர் சோலைகண் மகிழப் பாடிய வேழிசை, மலயக்
கால்விழைவு யாவையும் வரவிட் டாணிகன் மாரனே. (உக)

சிதைக் தாவினி தேயழ நீடிக் காலினி தேருளீர்
தேனிக் தார்வன வேபசி தீர்வுற் றுவில தேசனை
யெதெத் தாவினி தாமென வோர்வற் றேயவி வேகிக
ளேமத் தாமல மாயிலை சாமூற் றுரென வோதியே,

வேறு.

வேனி லாதன்வா விட்டபடை வியநலன்மெய்
விழியெ னுந்திகிரி யைக்கொடு நிரூபகன் வெறுங்
கான னீரினி லெழுந்திதி னெழுங் குமிழிமின்
கனவி னிற்கனவு போலழிவு கண்டுவிடுமே. (உ௩)

விட்ட விட்டபடை யாவையு மழிந்துவிடவே
வெறுங்கை யோடுபொரா மேனிகொடு செல்லவிருதோன்
முட்ட விட்டெழி னிரூபகன் விளங்குமறிவா
மூளரி யங்கையின் முருக்கினன் முடித்தலையையே (உ௪)

வேறு

பாப ராசிமுத லானபடை கொண்டுபொரு பாதகக்
கோப ராசனை யரும்பொறை யழிக்கும்வகை கூறுவாம். ()

வேறு

இனத்தையறுத் தறுத்தெறியக் கறுத்தெரியிற் சிவத்தே
சினத்தவகத் தினைச்சினையப் பனிக்கதிரிற் சிரித்தே ()

கதிக்குமொழிக் கனற்கடுகக் கெடக்குளிரக் கதித்தே
கொதித்தமனக் கனற்கினிமைப் புனற்குளிரக் கொடுத்தே
அறுத்தழலிட் டருத்தில்வினைப் பலத்தைநினைத் தசித்தே

யொறுத்தனைப் பொறுத்துலகத் தினைப்பெரிதுற் றொறாத்தே. (௨௮)

வேறு.

கோபனைப்புறன் காணக் கொலைபழி
பாப முற்றுந் துகளெழப் பட்டதே. (௨௯)

தாபந் தீர்தரு சந்தோ டன்கொளும்
லோபன் பட்ட பரிசு முரைத்துமே. (௩௰)

வேறு.

தொகுத்தநிதி பலகோடி யுண்டெனினுந் தொல்லையிலே
வகுத்தவகை யல்லாது துய்ப்பவரார் மண்ணினிலே,
ஒன்றிரண்டே யுடுப்பதுவு முண்பதுவு நாழியே
யென்றுமொரு வன்கிடையு மிருசாணுக் கெண்சாணே

வேறு.

ஈட்டியிழத்தல் வெங்கான மெங்குஞ் சென்று மங்காமற்
கூட்டியிழைக்குந் தேனீயைக் கண்டார்பின்னுங் கூட்டு வரோ. (௩௩)

ஆடும்பாத ரவைபோல வர்கும்படியு மதுபோலத்
தேடும்பொருள்கள் போம்படியுங் கண்டுந்தெளியார் சிலரு ண்டே. (௩௪)

வேறு:

மாநிதி கோடிதேடி யும்மாகா ணியுமின்றி
போனவ ரல்லாதொக்கப் புசித்தவரார் புவிக்கணே, (௩௫)

வேறு.

அலங்கொண்டு லோபன்ற னுசாபி சாசு
பிரப்புங் காப்பு மசத்யா நி புஞ்சகு
சலங்கொண் டிழுக்கு மொழுக்குங் கவாவச்
சந்தாப முஞ்செற்ற னன்பற் றறுத்தே. (௬௬)

உம்பன் புவிக்கன்றி வானுக்கும் யானே
யெனத்தன் மனத்தே நினைத்தங் கரிக்குந்
தம்பன் பெருங்கர்வ முந்தானு மண்டான்
சத்யா யுதங்கொண் டதம்பன் றிறத்தே. (௬௭)

வேறு.

வேறி லாவகை விருப்பொடு கலந்துநலனே
வினைய வின்மொழி விளம்பியு முளங்கெளியவே
மாறி லாதசெயல் செய்துமொரு காலுமழியா
மச்சரன்றனை யமச்சரன் வதைத்து விடுமே. (௬௮)

மந்த ரக்கிரியு நிற்குதல வேழுகடலும்
வற்று மேழ்புவியு மாளுமுயர் வானவுலகு
மந்த ரப்படுமெ னும்படி தெளிந்துடலின்மே
லாத ரன்றனைய நாதர னழித்துவிடுமே. (௬௯)

நெஞ்ச மொன்றுசொல் லொன்றுசெய லொன்றுடையதாம்
வஞ்ச கன்றனை யவஞ்சகன் வதைத்துவிடுமே. (௭0)

ஈரமொன்றிகழ் சாந்தியெதி ரேறியவகங்
கார ழும்படையு மாண்டதூர் கணப்பொழுதிலே. (௬௧)

வேறு,

மொழிந்தவாச கத்தினன்று தீங்குகாணு முன்னமே
யெழுந்தவேக ஞானியோர் விவேகனு லிறந்ததே.
மடக்குமாறி லாதவாத ராசகோடி மாளுமே
யடக்கமான வீரன்வாளி னற்றதார வாரமே. (௬௨)

சுபாடிதன் குபாடிதன் சிரந்தனைத் துணிக்குமே
யபாடிதன் வெகுப்பிரலாப ஞானிதன்னை வெளவுமே. ()
மாயையிச் சகத்துவத்து சித்துவீச னேயெனுந்
தூயசுப்ர புத்தனப்ர புத்தனைத் துணிக்குமே. (௬௪)

வேறு.

சுகனசு கன்றனைத்து ணிக்குமே
சுபனசு பன்றனைத்தொ லைக்குமே
யகனுயிர் பொன்றமெய்ச் சீர்த்திவா
ளதினக கன்றுணித்த டுக்குமே. (௬௫)

உடலின கந்தையைத் தனைச்சதா
வுணருப வன்கெடுத்து வக்குமே
படருறு சிந்தையைச்ச மத்தனோர்
பாமப தந்தனிற்ப டுத்துமே. (௬௬)

வேறு.

பிராந்தி சத்திய வாள்கையிற் பட்டதே
சாந்தியாலதி சம்ப்ரமன் பட்டனன்.
ஏக னார்படை யகலிப்ப டியினின்
மோக னார்படை முற்றுமு டிந்தவே. (௬௰) (௩௧)

ஆ. வாகே.

மோகசமன்வாகை.

விடமன்ன காமன் முதலான சேனை
விறலார்வி வேகர் படையாற்
படமன்னன் மோகன் மிகவேவல் கண்டு
படைகொண் டெழுந்து செலவே. (௧)

இகல்மோகன் முன்னி ருண்மீ தெழுந்த
ரவிபோல் விவேக னெழவே
பகலோ னெதிர்ந்த பனிபோ லிறந்த
படுமோகன் விட்ட படையே. (௨)

ஒருகோடி யம்பு விடமோகன்மீள
வொருசண்ட வாயுவுடனே
சருகோடு மென்ன வெழிலார் விவேகர்
தனியம்பு தன்னிவிடுமே. (௩)

வேறு.

மாளமாள விவேகனெய்ய மனத்தின்மந்திர வலியினன்
மீளமீள வெழுந்துமோகன் விடாதுபூசல் விளைக்கவே (௪

வீயுமோகினை வேரறுமல் விடஞ்செய்மோகன் விவேகனால்
மாயுமோவுயிர் மாயையாரு மனத்திருரு மிருக்கவே. (௫)
வுகனாகிய வீசனந்த மனப்பசாசற வெய்யிலே, மோசனுரு
யிர் மாயுமென்றன முன்னைநான்மறை முடிவதே. (௬)
மோகனுருயிர் மாள்வதெந்தை மனப்பசாசை முடிக்கி
லென், ஏகநாதர் துணைப்பதத்தில் விவேகராச னியம்
பவே. (௭)

வேறு.

புலகதிகள் யாவையு மரிக்கவே புகலிடமி லாமனநடுக்குறு
வுலகுபதி னாலுமொ ரிமைப்பிலே யொழியுமறி யாமையி
னொளித்ததே. (௮)

மனமுமறி யாமையு மரிக்கவே
மதிபெறொளி வாள்கொடு துணிக்கவே
முனமுதவு தாயெனுமவிச்சைதான்
முடுகமதி வாண்முக முழுத்திடே. (௯)

பரவுணர்வு வாளினைவி திர்க்கமா
பருதியென வேயொளி செறிக்கவே
யிரவுவடி வாகிய வவிச்சைதா
னிகலழிய வாருயி ரொளித்ததே. (௰)

அகலிடமி யாவுமத னைக்கொடே
யடையவெறி யாவனு பவத்தினாற்
புகலவரு மாயையை யறுக்கவே
புரண்பரி பூரண மெறித்ததே. (௧௧)

மாணபவ வீடுயிர் பரத்தொடே
மன்னனிரு சேனையு மனைத்துமோர்
காணமது வாதலின் மிகுத்தடுதே
கருணைநிதி யாருள மகிழ்ச்சியே. (கஉ)

இப்படி யொன்று மில்லா வகையெலா மிறந்த பின்னு
மப்படி யொன்று மில்லா னமைந்தில னமரி னுசை (கங)
பின்னரும் வான மாதிப் பெரும்படை யெழுப்ப ஞானப்
பன்னரும் படையில் யாதும் படும்படி பரமன் பார்த்தே.

வேறு.

வரவி யோமவொலி கோடிசெவி யோடுமடிய
பரவி யோமவிசை ஞானவொலி பண்ணியதுவே. (கரு)
வாத ஆறுபல தொக்குவர மன்னுபரமன்
பாத ஆறுணர்வு பற்றியிற வெற்றியிடுமே. (கசு)
ஊன நாட்டமொளி வந்தன வனந்தவுருவ
ஞான நாட்டவொளி வந்துற நசித்துவிடுமே. (கஎ)
மங்கு நாவிற னிறந்தவிர தங்கள்வரவே
யெங்கு ஞானரத வின்பமிடை யின்றியெழவே. (கஅ)
நாசி நின்றபுவி சேர்மண நடக்கநலமே
வீசி நின்றவறி வாமணம் விழுங்கிவிடுமே. (ககூ)

ஆக்கை யற்றபொரு ளொன்றக மதித்தமதியைத்
தாக்கை யற்றபொரு டன்னின்மதி தள்ளிவிடுமே. (௨௰)

ஐய மேயமைவ தானமன னங்கழியவே
வைய மேயமைவ தானமன னங்கழியுமே (௨௧)

யாது மாயறிவி றந்தபொரு ளொன்றுமிலதே
யாது மாயறிவி றந்தவொளி யொன்றுமுளதே. (௨௨)

ஊன மாகிய வகம்பிரம மாகியதுபோய்
ஞான மாகிய வகம்பிரம மாகியதுவே. (௨௩)

வேறு.

ஞான நாடகங் கண்டுள மகிழ்ந்தன னாதன்
வான நாடரும் வணங்கினர் வந்தடி மகிழ்ந்தே. (௨௪)

கேத மாயையும் புதல்வருங் கிளையுடன் மடிந்தார்
போத மாகிய சேனையும் பரன்பதம் புகுந்தே. (௨௫)

ஈச னிங்ஙன மழிக்கவெண் டிசைகளுங் கீழ்மேற்
பேசநின் றிடு மகிலலோ கங்களும் பிணமே. ஆக ௭௩௬.

---

களங்காட்டு

ஏது தானியம் புவமெனன விறைவியுண் மகிழ்ந்து
போது நாமென விரை வொடும் படுகளம் புகுந்தே. (௧)

வேறு

துய்யமாசில் சோதியாகு மேகனைச்சொ லப்படும்
வையமாவி யீசனுக்கு மாயையமர்தல் பாரிதே. (௨)

ஆவியாக்கி யெல்லையற்ற சனனமாக்கு மப்பெரும்
பாவியாமம் மாயைமாது பட்டபாடு பார்மினே. (௩)

வேறு.

அயர்ந்துபொரு மோகனை யளித்தவனை முன்னம்
பயந்தவறி யாமைபொடி பட்டபடி பாரீர். (௪)
மங்குமிட னின்றியொரு மாத்திரையி னுள்ளே
எங்குமுல வும்மன னிறந்தபடி பாரீர். (௫)
ஆக்கவல் லாங்குல காண்டவறி வில்லா
மேக்கவர் சிங்ஙன் முடிந்தபடி பாரீர். (௬)

வேறு.

தூமங் கலந்த குழன்மடவார் சூழக் கிடப்பத் துயிலெழிற்
காமன் கிடந்த கிடைபாரீர் காகம் பிணங்கு மியல்பாரீர்.
கரும்பார் கன்ன லெனமொழியுங் கனிவாய் பட்ட படிபா
ரீர், சுரும்பார் குமிழே யெனப்புகழுந் துண்டம் பட்ட
படிபாரீர். (௮)
ஆரக் களபச் சேருடி யறிவோர் தமையுந் திறலழிக்கும்
பாரக் கலசப் பயோதரங்கள் பட்டுக் கிடந்தபடிபாரீர்.

வேறு.

தவளத்தி னித்திலமோ தண்புறவின் முல்லைமுகை
தானோ செய்ய
பவளத்திற் பொதிந்ததெனும் புல்லென்பாய் முடிந்தபடிபா
ர்மின் பார்மின். (௯)

இணையென்ன மலரென்ன பெரியதமேபோ தனருளாலும் பேதஞ் செய்யுங்
கணையென்னக் கற்றவருந் துதிக்குங்கண் பட்டபடி காண்மின் காண்மின். (கக)

வேறு.

பரிபுரப தங்களவை பாரீர் பரிமள மணஞ்செய்குழல் பாரீர், நரிபொருது கொண்டபடி பாரீர் நலன்மருவு மன்பர் மதி பாரீர். (கஉ)

வேறு.

கலைகுழறினர் தஞ்செவியுங்
கண்ணுஞ் செவிடுங் குருடுமாய்க்
கொலைசூழ் வகைசெய் திடுங்கொடிய
கோயன் கிடந்த கிடைபாரீர். (கங)

வேறு,

ஆகமுமா வியும்பொருளு மளித்து நாதம்
கவனருளா லானந்த நாடா ளாதே
காகமுநாய் களுநமனும் பிறவு முண்ணக்
கைவிட்டுக் கிடந்தநிலை காண்மின் காண்மின். (கச)

முன்புமிகப் பொருள்பலருந் தேடித் தேடி
மூர்க்கையுடன் கொடுபோகா திறக்கக் கண்டும்

பின்புமிகப் பொருட்டேடும வாவன் செத்துப்
பிணத்திினும்வா யங்காந்த பெருமை பாரீர். (கரு)

வேறு.

அடித்தலை வணங்கநர பால
ரமைச்சரொ டிருந்தநிர்ப ராசன்
முடித்தலை கிடந்தபடி பாரீர்
முனைச்செயன் முடிந்தபடி பாரீர். (கசு)

உனவரு மகந்தையபி மான
முளவிருண் மனம்பொய்கள வாதி
யனைவரு முவர்தகிளை யோடு
மடையவு மிறந்தபடி பாரீர். (கஎ) ஆகூ எருசுஎ

---

கூழடுவார்.

என்றுதனி நாயக ரிகற்கள மியம்பிக்
குன்றுதவி லாவினிய கூழட வுரைத்தே. (க)
ஆங்கினி திருந்தன ளணங்கடு மடைக்குப்
பாங்கினிய பேய்மகளிர் பற்பலர் திரண்டே. (உ)

வேறு.

அகமாறீபுற முகமாறீயறி வறிவாளேபிறி தறியாதாய்
முகமாறீசுக வடிவாய்கூழட வாரீர்கூழட வாரீரே. (ங)

சான்றாகு மறிவொழியச் சாக்கியமாஞ் சகத்தென் றுந்
தோன்றாது கண்டாயே சும்மேலோ சும்முலக்காய். (சு)

விரியுமிடத் துகைறியும் புரியுமிடத் துணர்வறியுந்
துரியமதிற் றுரிசளாகாண் சும்மேலோ சும்முலக்காய். (ரு)

ஆங்குணரா மையமுணர்வு மாகியகோ ளறவிருந்து, தூங்
கினர்காண் சுகமடைவார் சும்மேலோ சும்முலக்காய். (சு)

தெரிப்பதென் பதுந்தெரிந்த விடத்தல்லாற் றெரியாத
துரியாதீ தம்மிதுகாண் சும்மேலோ சும்முலக்காய். (எ)

துரியாதீ தந்தன்னிற் புரிந்தாலுந் தொல்பிறவித்
துரிசன்றொழியாகாண் சும்மேலோ சும்முலக்காய். (அ)

துஞ்சுதல்கண் டாயதிதம் பிறப்பதுகண் டாய்துரியந் துஞ்
சல்பிறப் பொழிந்திலகாண் சும்மேலோ சும்முலக்காய். (கூ)

தொல்லையிறை யாகமஞ்சொற் றுரியாதீ தஞ்சுருதி, சொல்
லுகின்ற பசவுடல்காண் சும்மேலோ சும்முலக்காய். (ய)

கேட்டதென் றறியாத வதீதத்தைக் கேடின்றிச், சூட்டி
னது பரவுடல்காண் சும்மேலோ சும்முலக்காய். (கக)

நீங்குதலில் லாவறிவே நிகழ்ந்தக்கால் விழிப்பதுவுந், தூங்
குதலு முண்டாமோ சும்மேலோ சும்முலக்காய். (கஉ)

சத்தமர் திகளுமெலாந் தற்சொருப மானபின் சுத்தமாய்
விட்டதுகாண் சும்மேலோ சும்முலக்காய். (கங)

கருதவொண் ணா வெண்ணிறந்த காட்சியெல்லாங் கண்ணன
சொருபமாய் நிகழ்ந்ததுகாண் சும்மேலோ சும்முலைக்காய் ()

தோன்றியவில் வுலகமெலாஞ் சொருபமாய் நிகழ்ந்ததெனத்
தோன்றியதுந் தன்கண்ணே சும்மேலோ சும்முலைக்காய். []

எல்லாவண் ணமுமின்றி யிருந்தபடி யேயிருக்கச், சொல்
லாமற் சொல்லியவா சும்மேலோ சும்முலக்காய். (கசு)

எல்லாமா யல்லாத விறையியல்பை யின்னதென்று, சொல்
லர்ட விரகுண்டோ சும்மேலோ சும்முலைக்காய். (கஎ)

புலனாறுபாழ் வருஞ்சீவன் போதப்பாழ் வருமீசன், சொலவ
றுபாழ் வருஞ்சொருபன் சும்மேலோ சும்முலக்காய். (கஅ)

வையமுயிர் பரமாக்கு மாயைப்பாழ் மூன்றுமறத், துய்யசு
டர் தானேயாஞ் சும்மேலோ சும்முலக்காய். (கசு)

இடரின்பஞ் செயுமாயை யிருளின்ப வறிவாகுஞ், சுடரின்
கண் டோன்றுமதோ சும்மேலோ சும்முலக்காய். (உ0)

சொருபன்விழி மலர்கண்டு சும்மாவி ருந்துவிடச், சொருப
பரி பூரணமாஞ் சும்மேலோ சும்முலக்காய். (உக)

வாயுணர்வு மாண்டிடத்தே வாயிலா மட்குடத்திற், றேய
மென நிறைந்ததுகாண் சும்மேலோ சும்முலக்காய். (உஉ)

ஊமைமொழி கொடுபிரம மோதவுணர் வுற்றபடி, தூய்மறை
யின் முடிவுரைக்குஞ் சும்மேலோ சும்முலக்காய். (உங)

தற்பதத்தின் றன்னிலைமை தானறிய வோதுதலால்
சொற்பதத்தில் வாராகாண் சும்மேலோ சும்முலக்காய் ()
உற்பலத்தி னழகுமணை முருப்போல வொன்றின்கண்
சொற்படுசத் தியமாதி சும்மேலோ சும்முலக்காய். (உரு)
அல்லையுங் குழன்மாயை யவள்பயந்த வகிலம் வெறுஞ்
சொல்லையாய் விட்டதுகாண் சும்மேலோ சும்முலக்காய்.
அலைந்துவரு முளவிகற்ப மழிந்துவிடப் பிறவியெலாந்
தொலைந்தபடி கண்டாயே சும்மேலோ சும்முலக்காய். (உஎ)
இன்னதென மறைமுடிக்கு மியலாத விப்பரிசைச்
சொன்னபடி கண்டாயோ சும்மேலோசும்முலக்காய். ()
சொல்லாத மறைமுடிவைச் சொல்லாமற் சொன்னதனைச்
சொல்லாட விருகுண்டோ சும்மேலோ சும்முலக்காய்.
சாத்திரமென் செயநமக்குத் தர்க்கமய லறுத்தபிரான்
ஞேத்திரமே வேண்டுவது சும்மேலோ சும்முலக்காய்.

ஆக எ௬௪.

---

கூழ்சமைப்பு.

ஏகன தடியிணை யிங்ங னேத்தியே
மோகர்தம் பல்லெலா முறியக் குத்தியே. (க)
புண்ணிய னடியிணை போற்றி போற்றியே
திண்ணிய போதகச் செவியிற் றெள்ளியே. (உ)

வேறு.

பாதமா மலர்க ணல்கும் பரமனைப் பாடிப் பாடிப்
போதமா விடித்தி ராகிற் போனக மாக்க வாரீர். (௩)

செம்பொனான் மகுடஞ் சூடித் தேசிக னாக வந்த
வம்பொனா ரடிகள் சூடா முடிகளை யடுப்பு வையீர். (௪)

வாழ்வுமா டென மயங்கி வள்ளலார் கழலின் வந்து
தாழ்வுறு வறிவிலாளர் தலைகளைத் தடாக்க ளாக்கீர் (௫)

சொற்பதங் கடந்த வின்பச் சொருபனார் துணித்து விட்
டுற்பவ வுததிச் சோரி யடையவு முலையிற் பெய்யீர்

தொந்தவன் பாசத் தாலை சுற்றிவன் சுமையாய் வந்த
யந்தவிந் தனத்தான் ஞானப்பாவகன் றன்னை மூட்டீர்.

தீதண்டம் பெருக மோகஞ் செய்யுமக் காமராசன்
கோதண்ட மிரண்டாய் வெட்டிக் கூழடத் துடுப்புக்
கோடீர். (௮)

இராப்பகல் பசித்துப் பட்ட விடரினை நினைந்து நெஞ்சி
ற், பராக்கினை யொழித்து நல்ல பதத்திலே யிறக்க
வாரீர். (௯)

வேறு.

என்ற நந்தக டத்தி னாக்கிய வின்னமு
தொன்றி னான்றுவி ரைந்தெ டுக்கவு வப்பொடே. (௰)

தொடைத்து நயூங் தெளித்துத் தொழுது முழுதையும்
படைத்த மாதின் புரிக்கலம் பார்த்துப்ப டைக்கவே. (௧௧)

எமதி யாமென வெண்ணின ராவியெலா மெடுத்
தமுது செய்து திருக்கைவி ளக்கின ளன்னையே. (கஉ)
பஞ்ச பாசமி லையெனக் காயெனப் பண்ணியே
பஞ்ச பாசமடைக்கா யமுதுப டைப்பரே. (கங)
பத்த ராவிப ருகுதி ருப்பவ ளத்திலே
வைத்த வாயமு தத்தினின் மிச்சில் வழங்கவே. (கச)
வருக வென்று கணங்களை வள்ளல்க ளெள்ளுறு
குருகு நெஞ்சொ டழைப்பர்க டம்முட னுண்ணவே. ( )

ஆக அரசக.

---

இலகும் போதக் கண்விழித்தங் கெல்லாம் போத மெனக் காணு, துலகும் போதமாயையென வோதும் பேய்கள் வாரீரே. (க)
காணுஞ் சித்துத் தான்பரமன் காட்டுஞ் சித்தென் றுள்ள படி, பேணு முண்மைப் பொருட்பேதம் பேசும் பேய்கள் வாரீரே. (உ)
வேதா விரோத மறவொன்றும் வீட்டிற் பலவா நாட்டிலெ னப், பேதா பேத நிலைநிற்கப் பேசும் பேய்கள் வாரீரே.
கருதும் பொருளெல்லாமழியுங் கருத்தற் றதுவே வீடெ ன்று, சுருதி சொன்ன பொருட்சொல்லுஞ் சுகதப் பேய் கள் வாரீரே. (ச)
எல்லா வுலகங் கருமுடிந்த விடத்தே முத்தி யெல்லாமா

யல்லா தென்றப் பொருள்சொல்லு மருகப் பேய்கள் வாரீரே. (௫)

பொன்று முடல்போ வதுமுத்தி யின்பப் பொருளே பொருளல்லா, தொன்று மில்லை யென்றோது முலகா யுதப்பேய் வாரீரே. (௬)

பானத் தந்தக் காணத்தின் பதைப்பை யறுக்க வெனக்கேட்டும், பானத் தந்தப் பதைப்பறுக்கப் பார்க்கும் பேய்கள் வாரீரே. (எ)

அறவே தனைப் பட்டருந்துவது தேடித் திரியா தாரமுதம் பெறவே விம்மி யலமாக்கும் பேய்க ளெல்லாம் வாரீரே. இருக்கு முதலா மெக்கலையு மிதநோக்குறலா லகநோக்கி யொருக்கும் வகையே முயல்கின்ற யோகப் பேய்க்கும் வாரீரே.

துன்புற் றுழல வமையுமெனிற் றாரத் திரிமி ஞானமுதுண் டின்புற் றிருக்க வேண்டுதிரே யெல்லாப் பேயும் வாரீரே.

வேறு.

பொல்லாத வுடலமெலாம் பூரணமா கும்பரிச போத கத்தால், வல்லாளன் வென்றகளக் கூழுண்ணும் வகையடங்க வாரீர் வாரீர். (௰)

வேறு.

நினைத்து மறந்திச் சகத்தை யெல்லா நேரே யொறுத்துப் பாரர்ண்ட, மனத்தை யறுத்து மறுமாற்றந் தின்று கொள்ள வாரீரே, (கக)

போக்கும் வரவு மறுத்தகழல் போற்றிப் போதக் கூழுண்
டு, வாக்கு மனனு மிறந்திடத்தே வாளா விருக்க வாரீரே.
ஆக்கை யறுத்துக் கரணங்க ளறுத்துச் சீவ பரமறுத்து
வர்க்கை யறுத்தா னந்தக்கூ ழுண்ண வாரீர் வாரீரே. ( )

வேறு,

வீடாயெல் லாமென்று பொன்னடி சூட்டியே
வேதகஞ் செய்த வீரனை வாழ்த்தியே
வீடாயெல் லாங்கெட வுண்ண வரும்படி
மீளு முள்ளக் கலத்தை விளக்கியே. (கச)

இல்ல றந்துற வென்றிலை வேண்டினோர்
யாவ ரேனும் வருகென் றிடுவதே
நல்ல றமென யாவர்க்கு நல்கினோர்
நாதர் வெல்களக் கூழுண்ண நல்கியே. (கரு)

வேறு.

அலகைகள் கூழிற் கலமாலற்று ரமுமைதப்பெற்
றுலகுயி ரீசற் பகிர்வற வெல்லா முடனுண்டே. (கசு)
மெத்தித் தாகங் கெடநுகர் மெய்ஞ்ஞா னைந்தந்
தித்தித் தாக மயிர்க்கா ரேறுந் தேக்கிட்டே. (கஎ)
திருகறப்போதப் பேய்பசி யேயோ திருஞானம்
பருகப் போகப் படுவது பண்டைத் தாமுண்டோ (கஅ)

வேறு.

துஞ்ச லின்றியுணர் வின்றிமய லின்றியயலுந்
தொடர்வு மின்றியிட ரின்பமுத லின்றியெவையு

மெஞ்ச லின்றியிது வென்னுமியல் பின்றியுள்தா (௧௧)
மியாவை யும்பிரம மாகியதி ருந்தபடியென்.

ஆக ௮௨௮.

---

வேறு - குணலைவாழ்த்து.

அலைதிசை யானு மயன்முதலா
மண்டருந் தேடற் கரும்பதமென்
தலைமீசை யானமை பாடீரே
தன்கருணைத் திறன் பாடீரே. (௧)

ஒருபய மின்றி யானுமைக்கு
முற்பவ நோய்கெடப் பார்த்தருளுந்
திருநய னங்களைப் பாடீரே
செப்ப கருணையைப் பாடீரே. (௨)

ஒழிவற்ற சோதி யுணர்வுதன்னை
யுளங்கைக் கனியெனக் கண்டுகொள்
வழிவிட்ட வீரனைப் பாடீரே
வார்த்தை யொன்றுலென்று பாடீரே. (௩)

மரண பவங்கண் மடிந்திடவே
வடிவு புனைந்து வரும்பெருமான்
சரண நிகழ்ந்தமை பாடீரே
சந்தத மப்பதம் பாடீரே. (௪)

உன்ன வரிதென் றுபநிடங்க
ளோதும் பொருளை யொருமொழியிற்
சொன்ன விரகனைப் பாடீரே.
சொரூபா நந்தனைப் பாடீரே. (௫)

பவமாயம் வேரறப் பார்த்திறைவன்
பதத்திலும் பண்டை நாமொழிந்து
சிவமா யிருந்தமை பாடீரே
சிவப்பிர காசனைப் பாடீரே. (௬)

புத்திக்கு மெட்டரி தாயபொருள்
புவனியில் வந்தைம் புலன்களினுஞ்
சித்திக்கு மாறினைப் பாடீரே
தேசிக ராசனைப் பாடீரே. (௭)

ஊன நடங்கண்டு முன்னநம்மை
யொருரு வாய்வந்து ணர்த்திக்கண்ட
ஞானந டந்தனைப் பாடீரே
நடரா சன்றனைப் பாடீரே. (௮) ஆகூ அங்கூ.

---

மங்கலவாழ்த்து,

புரியும்விழி தந்தகழல் வாழியே
புறமகமி ருந்தபொருள் வாழியே

துரியமு மிறந்தசுடர் வாழியே
சொலவற விருந்தசுகம் வாழியே. (௧)

வேறு.

பேதமபேதம றுத்தவன் வாழியே
பேதமை தீரவ ளர்த்தவன் வாழியே
போதமபோதம றுத்தவன் வாழியே
பூரண போத சமுத்திரம் வாழியே. (௨)

துறந்தவர் கைப்பட்டி ருந்தவன் வாழியே
தொடர்ந்து பிடித்துப் புரந்தவன் வாழியே
யிறந்த வுளத்திற் றிகழ்ந்தவன் வாழியே
யிரங்கி யெனக்குத் தருங்கழல் வாழியே. (௩)

மறந்து நினைக்கப் படாதவன் வாழியே
மயங்கு மனத்தார்க் கிலாதவன் வாழியே
பிறந்து மரிக்கப் படாதவன் வாழியே
பெருங்க ருணைக்கற்ப காடவி வாழியே. (௪)

வேறு.

உருவருவொ டுளதிலது மொழிவில்பரன் வாழியே
யுளபொருளை யுணரிலவை யுருறுமவன் வாழியே
கருவழியை யழியவரு காசரணன் வாழியே
கழலும்விழி கருணையுட னருள்சொருபன் வாழியே. (௫)

ஆழ்குபெறு மௌனபத மருளுமவன் வாழியே
யடியருள் முருகவரு மருளமுதன் வாழியே
பழகிவரு பவதுயரை யழிசெய்பரன் வாழியே
பாகருணை வடிவினிகழ் பரமகுரு வாழியே. (௬)

அறிவுதனி லுருகுமறி வருளுமவன் வாழியே
யகமிகழு மறுவிழியி னமருமவன் வாழியே
பிறிவதறு புலனுருக வருளுமவன் வாழியே
பெருவிழியி லுருவழிசெய் பெருநிலையன் வாழியே. (எ)

வேறு.

அன்னையெ னக்கய லாக்கினன் வாழியே
யல்லல றுத்தெனை நோக்கினன் வாழியே
யென்னை யெனக்குற வாக்கினன் வாழியே
யின்னமு தத்துரு வாக்கினன் வாழியே. (அ)

வேறு.

தொழுமவ ரர்வி வாங்கிய வங்கணன் வாழியே
சுகமக மான சாந்தி நெஞ்சினன் வாழியே
யெழுபவ நாச மாஞ்சொல் லொன்றினன் வாழியே
யிமையவர் மூவர் தாந்தொ ழும்பிரான் வாழியே. (௯)

# மோகவதைப்பரணி.

கருதிய கோலமாந்திரு மேனியான் வாழியே
கதிர்வர் சோதி தாம்பெறுஞ் சோதியான் வாழியே
சுருதிகட்டு வான்பொரு ளாயினான் வாழியே
சுகமக மாக யாம்பெறுஞ் சோதியான் வாழியே. (௰)

வேறு.

தொழுகுலம்வி ளங்கவிமை யோரென்றும் வாடநீள்
சுருதிகளு நந்தமுக மாய்நின்று தேடமு
வெழுகுலம் விளங்கவடி யேனின்று சூடவே
யிணையடி வழங்குசொரு பானந்தன் வாழியே. (௧௧

வேறு.

மூவர்தேவர் வாழியென்று முடிவணங்கு மிருகழற்
றேவதேவன் வாழியே சிவப்பிரகாசன் வாழியே. (௧௨)

வேறு.

அலைவா மென்றங் கலையிடு தர்க்கப் பசாச மோசகன் வாழி
யே, யதுநீ யென்றங் கருமறை யுச்சத் திறேறது யோர்
பொருள் வாழியே, சொலவொ வென்றுந் தொடர்வரு சற்
சிற் சுகாதி காரணன் வாழியே, சொருபானந்தன் கலை
புனை தத்துவப் பிரகாச மாமுனி வாழியே. (௧௩)

ஆ அசசு.

மோகவதைப்பரணி.

தத்துவநிருபகம்—முற்றிற்று.

பதினெட்டாவது

# அமிர்தசாரம்.

## தத்துவதரிசனம்.

### வெண்பா—கலைக்கட்டளை.

### கடவுள்வணக்கம்.

ஞானக்கண் ணாளர்க்கு ஞானானந் தச்சுடரா
யூனக்கண் ணாளர்க் குலகமாய்—வானந்
தனக்குப் பெறவரிய தற்சொரூபன் பொற்றா
ளெனக்குப் பெறவெளிதே யின்று. (௧)

### அருளிறைவணக்கம்.

அறியாமை யாந்திமிரத் தந்தனாய் வீட்டி
னெறிகாண வின்றி நிலையற்—றிருவேற்கு
ஞானாஞ் சனத்தாலே நாட்டந் தனைத்தந்த
சோனாந் தொழக்கடவ கோ. (௨)

### வேதச்சிறப்பு.

இதினுள்ள தெல்லாக் கலைகளினு முள்ள
திதிலில்லா தியாவையினு மில்லை—யதினாலே
யாதுமறிய விரும்பினான் யாதுமுள
வேத மறிவான் விரைந்து. (௩)

# அமிர்தசாரம்.

## ஆகமச்சிறப்பு.

கற்பவர்க ளெப்பொருளுங் காண்பவர்க்குக் கண்ணாகு
முற்பவநோய்க் கெல்லா மொருமருந்தாம்—தற்பொருடான்
யாதா வுணர்ந்தா ரவர்க்கருவா மெக்கலையு
மோதா துணர்ந்தா னுரை. (௪)

## அறிஞருரைச்சிறப்பு.

எந்தக் குலமாயென் னெந்தக் கவியாயென்
னெந்தச் சமயத் தெவராயென்—சிந்தைத்
துறவிதருஞ் சொல்லே துய்நாவ தல்லாற்
பிறவிதருஞ் சொல்லே பிற. (௫)

## நூற்பெயர்.

வேதா கமமோதி மெய்ம்மை விளங்குதற்குப்
போதா தெவர்க்கும் புருடாயு—மோத
வுறுமமிர்த சாகரத்தே யுள்ள மதனாற்
பெறுமமிர்த சாரமெனும் பேர். (௬)

## அவையடக்கம்.

வேத மொழிப்பொருளை விண்ணவர்கண் மூவருமுன்
போத வுணரா வுலகறிய—வோதுகேன்
வானின்ற வல்லிருளை மாற்றுமின் மேனெழிப்பன்
யானென்ற மின்மினியே யான். (௭)

## நன்னெறியுரைத்தல்.

இம்மை மறுமை நிலையன் றெனவிடுக
செம்மை நெறிநடக்க சித்தந்—தமைமீட்க
தம்மை யுணர்ந்தோர் தலைப்படுக தத்துவத்தின்
மெய்ம்மை யறிக விரைந்து. (அ)

## அருமையுரைத்தல்.

பெறவரிது மக்கட் பிறவிபெற் றாலு
மறிவுநூ லாய்த லரிதே-வதினுந்
துறவுடைய ராத லரிதே யதின்மெய்
யறிவுடைய ராத லரிது. (கூ)

## ஞானிலக்ஷணம்.

அறிவுள்ள தல்லதில தென்றறிவான் ஞானி
யறிவான் முழுது மறிவா-னறிவ
னறிவறி யாமை யறவிருந்த வண்ணல்
மறையோது வான்பொரு டான். (ய)

## ஞானிசீலம்.

அருந்தல் பொருந்த லவையொக்கு மேனும்
பெருந்தகையோ ருள்ளம் பிறிதே—திருந்து
மனத்தின்வே றேபதியு மைந்தனுமம் மாதின்
றனத்தின்வே றல்லவே தான். (கக)

## ஞானிசரிதை.

நீதென நன்றெனச் சிந்திப்ப தீராதெளிந்தோர்க்
கோதென மன்றோ வுலகெலாம்—பாதகத்திற்
றீதாக னென்றுதல் சிந்தித்திட்சாத
வேதாவிற் குண்டோ விதி. (௧௨)

## ஞானிபெருமை.

விண்ணே பெரிது மிகவீசன் கைவழியா
மண்ணே யதுபெற்ற மாமாயை—யெண்ணிற்
சிவனிற் பெரியாரிற் சிந்தையிலார் வைத்தா
ரவனிற் பெரியா ரவர். (௧௩)

## ஞானியேவற்சிறப்பு.

எங்கே வெளிப்படுக வென்று னெழின்ஞானி
யங்கே வெளிப்படுதற் காதரித்தே—யெங்கும்
பரமனவ னேவல்செயப் பார்த்திருக்கும் யார்தான்
றரமவ னேவ றனக்கு. (௧௪)

## ஞானிபூசைச்சிறப்பு.

அவனுண்ட தண்டமெலா முண்ட தயனுஞ்
சிவனுந் திருமாலு முண்டார்—சிவமென்று
பூரண ஞானியைப் பூசித்தான் பூசித்தான்
காரணனைக் கண்ணாரக் கண்டு. (௧௫)

## ஞானியையிகழ்ந்தவர்கேடு.

எழின்ஞானி யையிகழ்வார் கேட்டா ரிகழ்கேட்
டழலா ரனுமதித்தார் நால்வர்-கழலுதன்
மேதக வென்றவரை விட்டகலா தார்பஞ்ச
பாதகரென்னப்படும். (௰௬)

## கூடாவொழுக்கம்

யோகத்தி னுண்மை யுணர்வின்றி யூண்பொருட்டா
லேகத்தி னின்றே றமெனவியம்பி-மோக
மனத்தவல மாற்றாத வல்வேடர் தம்மை
நினைத்தவருங் காணார் நெறி. (௰௭)

## கணவிதி

நன்ஞான ஞானி மரியா ளொருநாளு
முன்னான மோக விருண் முருக்கித்- தன்னுருவைக்
கண்டபொழு தேகழியுஞ் சூக்கவுடல் கன்மபல
முண்டுபோந் தூலவுடல். (௰௮)

தத்துவ ஞானி திருமேனி தாங்கினு
ருத்தம லோகத்தி னும்பரா-முத்தன்
திருக்கோயில் கொண்டவிடந் தேவா லயமென்
றிருக்கோர் தூ கின்றவிடம். (௰௯)

மூவாருந் தாபரங்கண் முப்பத்து மும்மையோ
ராவா ரொருப தாரும், (உச)

அணுப்பிரவேசம்.

ஆல கடங்க ளளவிலவற் றுட்புகுந்து
வானகந் தானின்ற வாறொக்கும்—யோனிகளெண்
பத்துநான் காயிர நூ றாகப் படைத்தவற்று
ணித்தனார் நின்ற நிலை. (உரு)

அழிப்பு.

ஆன வுடம்பனைத்து மைம்பூதத் தேயழியும்
வானாதி பூதமிரு மாயையினி—னானா
வொழிந்தமா மாயவிரு ளுள்ளொளியா ரிம்ப
ரெழுந்தனா னத்தா விறும். (உசு)

பவகாரணம்.

செறிபொருள ளாகித் திகழ்பளிங்கு போல
வறிபொருள தான வறிவன்றான்—றன்னை
யறியப் பிறவி யறலாற் பிறவிக்
கறியாமை யாகு மடி. (உஎ)

உடலுற்பத்தி.

ஆதபன்வா னுகுதியா னல்குமதி னேடதியா
மோதனமுண் டாயிருநீ குண்டாகு—மாதுடனுண்

டன்னுருவா யிக்கநீர்க் கண்டஞ் சமங்கவிழ்தல்
வன்னிபுழு வுண்டேன் மலடு. (உஅ)

## பிண்டகோசம்.

சுவர்செய்து மண்டசையாச் சோரிநீ ராக
விவரங்கள் காலியங்க விட்டுக்-கவர்கால்க
ணட்டுக்கை வைத்து நரம்பிட் டிரம்பெறவே
கட்டித்தோல் வேய்ந்தவகங் காண். (உகூ)

பிண்ட வுருவிற் பிறத்தலாற் கெர்ப்பத்திற்
பிண்ட வுருவா யிருத்தலா-னுண்ணும்
பிண்ட மிடவேண் டுதலா லுடற்பிண்டம்
பிண்ட மெனப்பேர் பெறும். (ந0)

## அண்டகோசம்.

நிலனேழு சூழுவரு நீரேழு கீழ்பா
தலனேழு வானேழு தப்பக்-குலகிரிக
ளொட்டுநடு மேருகிரி யேமகட கஞ்சூழப்
பட்டுளதோ ரண்டப் பரிசு. (நக)

## அண்டபிண்டவேற்றுமை.

வெளியசைவு வெம்மை நெகிழ்வுரமாம் விண்கா
லொளிபுனன்மண் கண்ணுதய வுள்ளங்-குளிர்மதியங்

கொண்டெய்த் தவனறிவு கோசயாம் பிண்டத்து
மண்டத்து முண்டோ வயல். (௩௨)

## வீடுபற்று.

நெடுந்தூர மண்மை நினைவுபோ மாறுங்
கடும்பரி கால்வைத்து வாங்கல்-படங்களெந்தோர்
புட்டகம் வேறே புனைத லிவைபோலும்
விட்டுடலங் கொள்ளும் வினை. (௩௩)

உற்பத்தி யாந்தாதை வாயு வுடன்கூடிப்
பொற்புற்ற கொங்கையர்தம் போகத்தே-கெர்ப்பத்தைக்
கொண்டேகை செல்லுமெனக் கூறுவீர் கூறீர்கண்
மண்டேகஞ் சென்ற வழி. (௩௪)

## உடலிழிவு.

மணமென் றியமாந்தர் வாயுப்போங் காட்டிற்
பிணமென்று பேரிட்டு பேர்த்தக்-கணன்வந்து
புட்கொத்து மிவ்வுடலிற் பொல்லாங் கொழிந்திருப்ப
தெட்குத்து முண்டோ விடம். (௩௫)

## குடும்பவிழிவு.

இடன்படு சீலந் திகழ்கல்வி கேள்வி
யிடம்படு மேதைசீ ரெல்லாம்-பசுமட்

குடம்படு நீர்போற் குடும்பியைக் கைவிட்
டுடம்போடு கூட வரும். (ருசு)

போகவிழிவு.

சிந்தா குலமனிதர் சீசீ செவிமுதலா
மைந்தானு மீடழிவ ரல்லரோ-வைந்திலொரு
வேட்கை யசுணமிபம் விட்டின்மீன் வண்டு
கேட்கைமுத லோரொன்றிற் கேடு. (ருஎ)

மகளிரிழிவு.

எரிகொண்டு மல்ல வெறிபடைகொண் டல்ல
வருநஞ்சுங் கூற்றுங்கொண் டல்ல-கருதிநெஞ்சத்
தம்மாதர் தம்மைப் படைத்த தனியிறையார்
தம்மாலே யாகத் தகும். (ருஅ)

பொருளிழிவு.

இன்னலா மீட்டுங்கா லீட்டினு வியாவரையு
மொன்னல ராக்கு முயிரிழுக்கு-மன்னு
மனத்தைவே றாய்மயக்கு மானடுக்கஞ் செய்யுந்
தனத்தின்வே றுண்டோ தவறு. (ருகூ)

அரசிழிவு.

முரசு விளங்குதம் முற்றத்திற் றெற்றி
யரசு வணங்குங் கழலா-ரொருசுணங்கன்

கவ்விய காலிற் கடைகடோ றுஞ்சுழல்வர்
வெவ்விய சொல்ல வெறுத்து. (௪0)

சுவர்க்கவிழிவு.

பொதுமாதர் தோளே புணர்வ தமிர்த
மதுபான முண்டே மகிழ்வ—தெதுகோடி
சாவார் பிறப்பார் சதுமுகனோர் நாளினிது
தேவா திபரெய்துஞ் சீர். (௪௧)

நிலையாமை.

உலகி னிலைநிற்ப தொன்றில்லை யென்றே
தலைவர்கண் மூவருஞ் சாற்றினா—ரக்தே
மலைவுறு மார்க்கர் மதமு மதனா
னிலையின்மை யொன்று நிலை. (௪௨)

துக்கத்தொகுதி.

கருக்குழவி கௌமாரங் காளைப் பருவம்
விருத்த மழைவெய்யில் வீசும்-பனிக்கால்
கருத்தி னுறக்க முணர்ச்சியெக் காலத்
தொருத்தனின் பத்தை யுறும். (௪௩)

துறவு.

மடம்படு மிப்பிறவி மாற்ற நினைவார்க்
குடம்பு மிகையென் றுணர்வு—மடங்கத்

துறவா மனிதர்க் கெளிதன்றே அஞ்சிப்
பிறவா நெறியைப் பெற. (௪௪)

புத்தன்.

ககனமு மான்மாவுங் காரண னு மில்லை
சகலமு மாமநித்தஞ் சார்வார்-பிறவி
வகைவினை யுண்டு மதிபொன்ற மாய்தல்
சுகதன்றன் முத்தித் துணிவு. (௪௫)

காரணமே யான்மாக் கணபங்கி நித்தப்
புரணமோ வீசன்வான் பொய்யே-மரணமே
வீடென்று நாத்திகரின் வேறுவிப் புத்தனெனு
மூடன்றான் சொன்ன மொழி. (௪௬)

சமணர்.

உருவருவுண் டில்லை யொன்று பலவாம்
பொருளியல்ப துளவே போதஃமருகர்க்
குறுவினை விட்டா லுலகூப்பர் வீடு
குறியதற் கெட்டுக் குணம். (௪௭)

வெளியிற் பறந்துபோய் வீடெங்குப் பெற்றாய்
குளிர்வெம்மை கண்டாயோ கூட-வுளதில்லை
யொன்று பலவென்று யுளவென் றுயுணர்வை
யென்று மதிகண்டா ரியார். (௪௮)

## உலோகாயதம்.

இறந்தார் பிறவா ரிலதுவா னீச
னறம்பாவ மாயிழையார் கூடல்—சிறந்த
நன்றூர் சுவர்க்க நரகம் பிரிது
லுலகா யதன்ற னுணர்வு. (சகூ)

சடவுடற் நன்மைசாக் காடு நரகங்
கடவுள் வலிகாட்டுங் கண்ணுங்-கரும
முடியாமை காட்டு முனைவினையை மாத
ரடைவதே காட்டு மளறு. (ருய)

## மீமாஞ்சன்.

நரகுசுவர்க் கந்தீங்கு நன்றாங் கருமத்
தருபிறை தானன்றி யில்லை-பிரமமொலி
நாடுங் குணன்புத்தி ஞானமில்லா டாணம்போல்
வீடென்றான் மீமாஞ்ச கன். (ருக)

சித்துச் சடமாகை யோமுத்தி செய்வினைகள்
சுத்தச் சடமீய வற்றோ சுகதுக்கம்
புத்தி குணமாயிற் பொன்றுமோ வான்குணமாஞ்
சத்தப் பிரமமோ தான். (ருஉ)

## நியாயம்.

அணங்குற்ற வான்மா வநேகம் வியாபி
குணம்புந்தி யாமுத்தி கூறிற்-பிணம்போல்லை
மெய்யா மிறைவனையும் வீடுகட்டுக் கேதுவா
னையா யிகநூ னலம். (௫௩)

செயாறு வினைச்சடமாய்ச் சென்மத்தைச் செய்யிற்
றயாவிலனு மவ்வீசன் றானும்-வியாபி
குணமாகிற் புத்திக்குக் கூடா தொடுக்கம்
பிணமாகை யோவீடு பேறு. (௫௪)

## வைசேடிகம்.

முத்தியி னிர்க்குணனாய் முன்னங் குணங்குணியாய்ப்
பத்தியினன் முத்தியுறும் பாவனையாற்-சுத்தச்
சடர்ப்பலா யவத்தை சார்தலான் மாக்கள்
கடனென்றான் வைசேடிகன். (௫௫)

ஆவ சடலங்க ளான்மாவே யாமவைம்போர்
மேலாவு மவத்தையுறு முன்னுணர்விற்-பாவனையாற்
கூடுமோ வீடு குணம்போய்க் குணியுண்டோ
சூடுபோய்த் தீயுண்டோ சொல். (௫௬)

## சாங்கியம்.

பகுதி புமான்மெய்ப் பகுதிப்பா லேவிகுதி
சகலந் தனதென்கை பந்தமாம்-விகுதியாம்

யாதும் பகுதி யுடையதெனக் கில்லையெனும்
வேதனஞ் சாங்கியன்றன் வீடு. (ருஎ)

முன்னரே யுண்டேற் பகுதியதான் முத்தியிலை
பின்னுஞ் சடமாம் பகுதி-பெறக்கூடா
தன்னாலே வீடெய்து மாகினீ சற்குருவைக்
கொன்னே விரும்பியதென் கூறு. (ருஅ)

சைவம்.

மடவன் பசுபதி வாலறிவன் பாசஞ்
சடமா மியல்பு சமமா-முடன்வியாபம்
பண்டுளவை மூன்றும் பசுபாசம் போயிறையைக்
கண்டுறைதல் சைவர் கதி. (ருகூ)

ஈசனது தோற்றமே தெல்லாம் வியாபித்தாற்
பாச மிலாதான் பதியென்னிற்-பாசமெனில்
விண்டிடா தாம்பதியால் மெய்கரணம் வேறுண்டாங்
கண்டிடா நின்ற கதிக்கு. (கூ0)

சம்மேளித சைவம்.

பாசமாம் பந்தம் பசுப்பெத்த முத்தனு
மீசனநாதி யிவர்ஞானம்-பூசையா

மம்மோக மாற்றி யவரொன்றல் வீடென்றான்
சம்மேளி தச்சைவன் றான். (௬௧)

பெத்த மாதி கெடுமான பின்கெடுமே
முத்தியும் பாசந்தான் முன்னுள-தேற்கெடுமே
சத்தி யெனில்வெம்மை போனாற் றழலுண்டோ
வுத்தி யிலதிரண் டொன்றாகா தொன்றுகெடின்
முத்தி கெடலோ மொழி. (௬௨)

பாசுபதம்.

ஆகில மிறைமுன் பணுத்திரள் செய்யுஞ்
சகலாத்து மாக்க ளேயா-மலங்க
ளகமலம் பூசையா லொப்பாகை முத்தி
பகர்கின்றான் பாசு பதன். (௬௩)

சகம தணுவாஞ் சடஞ்செய்யு மாறென்
புகலணுவும் பூதமே யன்றோ-வகமில்
கிரியையாம் பூசை கெழுமலங்கள் போக்கி
விரியு மிருளா விருள். (௬௪)

வாமம்.

எண்ணிய அட்கச் சமயிக ளெவ்வுருவும்
பெண்ணுருவிற் காணும் பிறப்பதெலா-முண்ணறவே

புத்தியு முத்திப் பொருளுந் தரும்பிணமே
சத்தி யிலாதவெலாந் தான். (கூரு)

மேதினி யொன்றை விளக்குமோ வித்தின்றி
மாது தருகுவ மையற்-பிறப்பன்றே
போத மழிபுலனீர் புத்திக்கு முத்திக்குஞ்
சாதன மானதோ சாற்று. (கூகூ)

பைரவம்.

ஏகமாம் பைரவமெண் டத்துவமா யெண்கலையா
யாகிய ஞாலந்த ஞர்ச்சனையாற்-போகமா
முத்தரிக்கு நால்வரா ளல்வரா யோகத்து
வித்தரிக்கு முண்ணறவால் வீடு. (கூஎ)

ஏகத்து வங்கெடுமே யெட்டானுன் மற்றவையே
யாகிற் கலைசொல்லா தாயழியும்-போகமுனக்
குள்ளதோ வன்றோ தருவா ருருகருத்தோ
கள்ளதோ நல்குங் கதி. (கூஅ)

காளாமுக மாவிரதம்.

வேணியென் பக்குமுதறரித்து மெய்விரதந்
தாணு வுரைப்படியிற் றப்பாமற்-பேணிப்
புரைதங்கர் தானசிவ லோகம் புகன்மா
விரதங்கா ளர்முகன்றன் வீடு. (கூ)

தவ்வேடங் கொண்டவுட னுனழிந்தாம் போமே
யுவையோகின் றீட்டேற்று முன்னைச்-சிவலோக
மெங்குமெனக் காணாதே யோரிடத்தே யேறினார்
சங்கையில் வீழ்வதற்குத் தான். (எ௰)

## சிவாத்துவிதம்.

அனாதி சிவஞ்சகத்து மாருயிரு மாகத்
தனாதுருவைத் தானே பகுத்துத்-தனைலொழியப்
பேறிழ வில்லை பெறுவானு மீவானும்
வேறில தென்றறிதை வீடு. (எக)

தானே சகத்தாய்ப் பகரினது தான்சடமாந்
தானே பிறப்பாக்கிற் றானொழிக்கிற்-றானே தன்
கண்ணைக் கலக்கிக் கடவுளா முற்சிவம்போய்
வெண்ணைக் கழுமோ விளம்பு (எஉ)

## வைஷ்ணவம்.

நாராய ணாயதிரு நாமந் தரித்தலா
லாரா தனையா லடிமையெனப்-பேராழி
கோயிற் பொறியால்வை குந்தப் பதந்தந்தை
தாயிற் றருஞ்சீ தரன். (எங)

மண்ணா விடுநாமம் வாளொரியா விட்டகுறி
புண்ணா முடம்பொழிந்தாற் போகாதோ-விண்ணாடில்

வைகுந்த மேவுதிரு மாலுருவங் காணவொரு
மெய்கொண் டிருக்குமதோ வீடு. (எச)

மாயாவாதம்.

அவிகார மேபிரம மாயையினு லாகி
யிவிகார மெல்லா மிறக்கும்-பவமான
வூனதும்பொய் ஞான முதித்ததும்பொ யஞ்ஞானம்
போனதும்பொய் மற்றுமெலாம் பொய். (எரு)

அவிகாரத் தன்மை யவிகாரங் காணி
லவிகாரந் தானல்ல வாகு-மவிகார
மாயை யறியி லவிகார மாயையாய்
வீயும தாரறிவார் வேறு. (எசு)

சௌரவாதம்.

தோற்ற நிலையிறுதி செய்தலாற் றொல்லுலகி
லேற்றவிரு ளெல்லா மிரித்தலாற்-போற்றவருஞ்
சங்கரன்மா லான்முகனுய்த் தற்பரனாய் நிற்கின்றான்
வெங்கதிரோ னல்லதிலை வேறு. (எஎ)

ஈசன் முனிய வெயிறு விழவிழுந்தான்
மாசுண வாயின் மறைப்புற்றான்-றேசினுற்
றற்பவமா முள்ளத் திருளொழியா ளொருவன்
றற்பரனு வல்லனே தான். (எஅ)

### சேரமவாதம்.

பேர்தல் வருதலுளன் பூரணனு மல்லவிவன்
பாதிநா டோன்றான் பகலவன்றான்— சோதியா
லிந்திர சால விருளொழியா னென்னலாற்
சந்திரனு லென்செயலாந் தான். (எகூ)

### ஊழ்வாதம்.

தனுகம் வினையே தரில்வினைதான் செய்ய
முனுக முளதாய் முடியு—மனுதியெனி
லெஞ்ஞான்று முத்தி யிலதாகு மிவ்வூழிற்
கஞ்ஞான மாகு மடி. (அ0)

மந்திர மானதெலாம் வார்த்தையே யவ்வார்த்தை
யந்தர வானின் குணனதுவே—வந்து
பலியா தருள்குருவைப் பாவியா னுகில்
வலிதா னவன்றன் வலி. (அக)

### மருத்துவாதம்.

மருந்தா னொருவரிம் மாநீ ருலகத்
திருந்தா ரெனக்கண்ட தில்லை—வருந்துவதென்
யார்க்கு மழிவு விளைப்பதாம் யாக்கையெனு
நீர்க்குமிழி பூண்கட்டி நீ. (அஉ)

### ஜாதிசங்கற்பம்.

ஆதிபே தந்தா னிலாமை யருந்தவர்கள்
சாதிபே தஞ்சிறிதுஞ் சாற்றுவரோ—சாதிகுல
நல்லார் தொழத்தக்க ஞான முடையவரே
அல்லா ரிழிகுலத்தா ராம். (௮௩)

### தீர்த்தசங்கற்பம்.

அறன்சாரா வுள்ளந் தறியா வழுக்குப்
புறன்சாரு நீராலே போமே—திறன்சாரா
வோடுந்தீர்த் தந்தா னுடற்சே யுளம்விளங்க
வாடுந்தீர்த் தந்தா னறிவு. (௮௪)

### அருச்சனா சங்கற்பம்.

சலமுழுகி நீர்தேடிப் பூத்தேடிச் சாணி
நிலமெழுகி யர்ச்சியா நிற்பர்—புலமிலவ
ருள்ளத்தே நின்ற வுலப்பில்பர மானந்த
வெள்ளத்தே நின்று விடாய்த்து. (௮௫)

### அத்துவாசங்கற்பம்.

இந்நெறி யிந்நெறியென் றெம்மார்க்க மும்பகர்வ
வந்நெறி யெல்லா மறிந்தவறி—வெந்நெறியா
லெய்தலா மந்த நெறியென் றறைந்தமறை
மெய்தவா வீட்டி னெறி. (௮௬)

சாத்திரசங்கற்பம்.

ஓது முறையின் பொருளுணர்ந் துள்ளபடி
போத மறியாப் புலவர்நூ—லோது
மொருகோடி நூரு யிரத்தானு முண்மை
யருகூடு போகா ரவர். (அஎ)

பிரமாணசங்கற்பம்.

அறியப் படுமளவை கொண்டளவை யெல்லா
மறியக் கடவ வறிவை-யறிய
விருப்புற் றிடுவான் விறகதனைக் கொண்டு
நெருப்புச் சுடுவா னிகர். (அஅ)

தர்க்கவாதம்.

தர்க்கநெறி வென்றக்காற் றம்ப மிகப்பெருகுந்
துக்க மிகப்பெருகுந் தோற்றக்காற்—றர்க்க
நிலைபெறுவ தொன்றல்ல நெஞ்சுகன்றக் கத்துந்
தலைபறியே யெய்துபயன் றான். (அகூ)

வாதத்தொகுதி.

உரைத்த துரையர் துரைக்குஞ் சமயம்
பரத்தை யறிவுற்ற பான்மை-மரத்தி
னவயவத்தி னேரொன் றறிந்தார் மரமா
வவயவத்தைக் கொண்டவர் றாம். (கூ0)

கேடுகண்டிரங்கல்.

கருத்துகட் கிட்டாய்க் கதிபலவா மீச
னுரைத்ததென் றென்றுணர வொட்டா-புரித்திங்
கிலதுள தென்னு முளதில தென்னுங்
கலதியர்க டஞ்சமயக் கத்து. (௬௧)

நன்னெறி.

எய்த வெளிதா மிறையரு ளில்லையே
லெய்த வரிதா மியாவர்க்கு-மெய்தெளிந்தா
லெம்மார்க்கத் தோடு மிகலற் றிருக்குமதே
சன்மார்க்க மாகுநெறி தான். (௬௨)

அட்டாங்கயோகம்.

இயமநிய மாதனம் வாயு விசையங்
கயையுறு பிரத்தியா கார-மமையுறு
தாரணை தக்க தியானஞ் சமாதியென
வோரணியும் யோகங்க ளெட்டு. (௬௩)

ஏம முறுமியம மீரைந் திவைதன்னிற்
றூய்மை யருளூண் சுருங்கற்-பொறைசெவ்வை
வாய்மை நிலைமை வளர்விப்ப வாற்றுவ
காமங் களவு கொலை. (௬௪)

வாய்மை யெனப்படுவ தியாதெனின் வாய்மையினத்
தீமையி லாதவெனச் செப்புவர்க-டூய்மைமிக

வோதும் பரமா முலப்பிலா வொன்றென்பர்
வேத முடிவுணர்ந்தோர் மெய். (கூ௫)

மம்மர்செய் யாமை வதையாமை யெவ்வுயிர்க்குந்
தம்முணர்ந்தோர் தம்மை வதையாமை-தம்மை
யெறியடை காணீ ரெரியிற் படாமை
யறிகை யெனவறிவ ரால். (கூசா)

மதுகையில் வஞ்சனையி லோர்பொருளை யெளவு
மதுகள வென்பரறிஞர்- மதமோதிற்
றன்னதல் லாத வுடம்பைத் தனதுதா
னென்னல் களவாகு மென்று. (கூஎ)

அரிவையர் தம்மை யணுகாமை யாகும்
பிரம சரிய மதினும்-பெறுதற்
கரிய பிரமத்தொன் றுனார் பிரம
சரிய முடையவரே தான். (கூஅ)

தாயோடு தந்தைமகத் தாரந்தான் சத்துருவாந்
தீயவனு நேரோக்கக் காணுமது-செவ்வையாந்
தாய நிலைமை சுருதிநெறித் துணிவு
தாயர்போன் றன்பு தயர். (கூகூ)

மிகைசெய்தார் தம்மைத்தாம் வென்றுவிட வேண்டி
விகல்செய்யா தென்றும் பொறுக்க—விகல்செய்யிற்
கோபத்தை யொன்றையுங் கொல்க வதுவல்லா
ருபத்தை யெல்லா மறும். (ா)

அற்புத யோகிக் கனுகூல மானவூ
ணற்பவூ ணுவ தெனவறிக—வாடுகின்ற
பொற்புறு நீரிற் புறத்தூய்மை யுட்டூய்மை
சிற்பொருளா லுள்ளந் தெளிவு (ாக)

நியமம்.

தவஞ்செபஞ் சந்தோட மாத்திகந் தானஞ்
சிவன்றரு நல்விரதஞ் சித்தாந்தக்—கேள்வி
யுவந்த சிவபூசை யொண்மதிநாண் பத்து
நிவந்த நியமங்க ளாம். (ாஉ)

தவநோன்பா லூண்சுருக்கித் தம்முடம்பை வாட்ட
லெவனுன் பிறவியெனக் கெய்திற்—றெந்தாலே
சிவமான முத்திக் கிறனேமென் றோர்தல்
பவமாறப் பண்ணுந் தவம். (ாங)

கூடியது கொண்டமைதல் சந்தோடங் கோகாக
ளூடு முதலா நவில்கின்ற—வெப்பதமும்
வீடிப் பரமுளத்தே மெய்காண் மகிழ்ச்சிசந்
தோட மெனுஞ்சுருதிச் சொல். (ாச)

ஆத்திகம் வேதநெறித் தோற்றமா மாதரத்தோ
டூத்தல் பயன்கருதா தீகையாங்—காத்திரத்தால்
வந்தித்தல் வாயார வாழ்த்தன் மனத்திறையைச்
சிந்தித்தல் பூசை செயல். (௱௫)

பிரமந்தா னுய்த்தெளியப் பேசுமறைக் கேள்வி
திரிவன்னத் தோர்கட்குஞ் சித்தாந்தக்—கேள்வி
புரையில் புராணந்தான் பொய்யிலா மாதர்
சரதவே ளாளர்க்கு மாம். (௱௬)

மந்திரந் தாரக மாதியா மன்னிருடிச்
சந்த மதிதெய்வந் தான்கொண்டு—முந்தி
யுரைவாய் துடியுள்ள லொன்றிற்கொன் றோரா
யிரமாம் பயனுண் டிவை. (௱௭)

வெறுத்தே யரிதெனினு மென்மேல் விருப்ப
மறுத்தே யிதுவே யறம்பொரு—ளின்ப
மிறுதான வீடு மெனக்குரவ னேவன்
மறுசெயன் மாவிரத மாம். (௱௮)

ஆசின் மறைநெறியி னுதரவு தான்மதியர்ன்
றேச வழக்கிற் சிறந்த—மறைநெறியி
லாசிது வென்னுங் கருமத் தருவருத்துக்
கூசாது நாணமெனக் கொள். (௱௯)

### ஆதனம்.

பத்திரங் கோமுகம் பங்கேரு கஞ்சிங்கஞ்
சொத்திகம் வீரஞ் சுகாதனம்—முத்த
மயிலாச னந்தண்ட மாயோ கியர்கள்
பயிலா சனங்களிவை பத்து. (ளாய)

செவ்வே யுடலுங் கழுத்துஞ் சிரமுமுற
வெவ்வா தனத்தே யிருந்தவர்க்கும்—கைவந்தால்
வாத முதனோய் நலியா மதியுடையோ
ராதன மென்ப தது. (ளாயக)

### பிராணாயாமம்.

வாங்கிப் பதினாறு மாத்திரை நான்மடங்கு
தாங்கித்தற் பாதிதனைவிட—கால்வலத்தால்
வாங்கி லிடத்தி லிடத்தேல் வலத்தில்விட
வோங்கார முச்சரித்துக் கொண்டு. (ளாயஉ)

### பிரத்தியாகாரம்.

ஒருக்காலு முள்ள முபாதிவே றாகப்
பிரித்துணர்வைக் காண்டலும் பின்ன—வுபாதி
களைத்துப் பருகிவெறுங் கண்ணுக் குதலும்
பிரத்தியா காரமெனப் பேசு. (ளாயங)

## தாரணை.

ஆய வுடம்பனைத்து மைம்பூதத் தேவைத்து
மாயையி லேவைத்த மாபூத—மாயை
பரத்திலே வைத்தப் பரமேதா ஞகத்
தரித்தலே தாரணை தான். (௱௰௪)

## தியானம்.

பொருளின்மெய் காண்டல் புலத்தியர்ன முள்ள
பொருணினை தல்புத்தித் தியானம்—பொருளறிந்த
பேரத மறிதல்போ தந்தியானம் போதமே
யாதல் பரத்தியான மாம். (௱௰௫)

## சமாதி.

காய முதலையா காயா தியிலழித்து
மாய விருளினவை மாள்வித்து—மாயை
யொருக்கித்தன் ஞற்ற லுளபரத்தோ டொன்ற
யிருக்கை சமாதி யியல்பு. (௱௰௬)

## அணிமாதிபலவிகழ்ச்சி.

நல்ல வியோகெட்டு ஞானத்திற் கங்கமெனுச்
செல்வ மணிமாதி சிந்தைசெய்வார்க்—கல்ல
விரும்பின் சுவர்கரும்பின் கோலா லிடந்து
விரும்பித் தவிடெடுப்பார் வேறு. (௱௰௭

## ஈருடல்.

வேய்ந்ததோல் சோரிதசை வெள்ளென்பு மச்சைசிரை
சேர்ந்த திரடூல தேகமா—மேய்ந்த
வகனுற் காரணமீ ரைம்புலன் வாயு
பகர்சூக்கம் பத்தொன் பது. (௱௰அ)

## பஞ்சகோசம்.

அன்னம் பிராணன் மனஞான மானந்த
மென்னுங்கோ சங்களிவையைந்தும்--பன்னுங்
கிரமத்தா லொன்றிற்கொன் றுள்ளாகுங் கேடில்
பிரமத்தா லாகுநிலே பேறு. (௱௰௯)

## பஞ்சாசயம்.

பந்திக்கு மாமா சயம்பக்கு வாசய
மந்தமலமூவர்நீ ராசயங்கண்—மைந்த
ருறைதரு கெர்ப்பா சயமென் றுடற்கே
யுறைதரு மாசயங்க ளைந்து. (௱௨௦)

## ஈரேழுநாடி

ஈரேழு நாடி யிடைபிங் கலைசுழினை
வாருனை நாட்பூடா வைரி--யலம்புருடை
காந்தாரி பைசுனி சங்கினி யத்தி
சிகுவை குகுபுருடன் கூ. (௱௨௧)

### ஏழ்வாயு.

பிராண னபான னுதானன் வியான
னாகிசையன் றேவதத்த னுமை—கிருதரனே
அந்தரி யாமி முக்கியன் பிரபஞ்சன்
வைரன் சமானன் வளி. (௱௨௨)

### ஷடாதாரம்.

மூலாதிட் டான மணிபூ ரகம்விசுத்தி
யேனு மனாகத மாஞ்ஞை—யிருமூன்றின்
மேலாதா ரத்துமதி வெய்யோன் விசுத்தியிற்றீ
மூலாதா ரத்துறைய மூண்டு. (௱௨௩)

### அஷ்டவிகாரம்.

உன்ன வருங்காம கோப முலோபமுடன்
மன்னுறு மோக மதமாச்—சரியந்
தன்னை மிகமதிக்குந் தம்பம் பொறாமையெனு
மின்னல் விகாரங்க ளெட்டு. (௱௨௪)

### ஷட்பாவனை.

ஒன்றிற் பிறத்த லுளதாத லோங்கிவள
ரன்றிப் பருத்த லறத்தேய்தல்—பொன்ற
லெனுமாறு பாவமு மிவ்வுடற்கே ஞான
னமாந் தனக்கில்லை காண். (௱௨௫)

சட்கோடி.

வீடுபேற் றில்லை பிறிதொன் றிற்றன்னை
வீடுபேற் றில்லை பிறிதொன்றைத்—தன்னாலும்
வீடுபேற் றில்லை தன் றற்றன்னை யிவ்வாறு
கோடியு மில்லை தனக்கு. (௯௨௬)

சடீனம்.

அன்னபா னங்கள் பிராணனை தேயாகு
மன்னு மகிழ்வு மடிவு—மனத்தன
வின்னலா மூத்த விறக்க வியாக்கைய
குன்னுக்கு நாடி விலது. (௯௨௭)

முக்காரகம்.

மெய்யுடல் வாக்கு மனமென்று மாந்தர்
துயருறு மின்பமுந் துன்பமுந் — துய்க்கச்
செயலுரை சிந்தனை தீமையு நன்று
முயல்வன காரக மூன்று (௯௨௮)

மும்மலம்.

உருவுணர வொண்ணு வகையுணர்வை யொன்றி
மருவிய வாணவ மாயை—கருமங்கள்
மூக்குந் தவிடு முமியு மிவையாக்கை
யாக்கும் பவவித்துக் காம். (௯௨௯)

### முக்குணம்.

உத்தமாஞ் சாத்திகமுந் தூய்மையி னுமதரு
மத்திமமா ராசதமு மாந்தர்க்கு—நித்த
மறிவற்றி யாமை யவற்றின் புணர்ச்சி
குறியுடைய மூன்று குணம். (௱௩0)

### முப்பிணிக்குணம்.

நீதி கருணை நிலைமை யபிமானம்
போத மனைவியின்மை போரிற்—புறங்கொடுத்தல்
மேயுங் கவர்ப்பழித்தல் வேண்டா தவைபிதற்றல்
வாதக் குணமா மதி. (௱௩௧)

அறிவுடைமை யைந்தடக்க லாகத் தழகு
நெறியுடைமை சொல்வன்மை நீர்மை—பெறவரிய
வத்து வித்ஞானத் தாதரவா மாண்மையிவை
பித்தகுண மாவதெனப் பேசு. (௱௩௨)

பொறிபிற ழாமை புகழ்கருணை யூக்கங்
குறிமதுகை கோப மிலாமை—பொறையோர்
நியமின் றியவீகை நெஞ்சத் துவகை
கபமொன் றியகுணமாக் காண். (௱௩௩)

### முத்தாக்கம்.

ஆதிபௌ திகமாதி தெய்விக மான்மிகமென்

றோது துயர்மூன்றி னுட்க வருமிடியின்
வாத மழைவேனில் வன்னி பனியாதி
பௌதிக மாகும் படர். (௩௬௪)

வாயு முகமேனைவு மானுடர் மாப்பறவை
பேயசுரர் நாகத்தார் பீடையாங்-காயத்தின்
மானஞ் சினமவா மாச்சரிய மாதிமனந்
தானதுய ராதியான் மா. (௩௬௫)

இடனில் கருப்புகுத லீங்குப் பிறத்த
னடையுடன் மூத்த னரைத்தன்-படமை
சிலர்வறச் சாத னிரயம் புகுத
லனையவை தெய்வீக மாம். (௩௬௬)

மூவேடணை.

மகப்பற்ற தாகும் வருஞ்சுற்ற மெல்லாஞ்
சகப்பற்றுச் சங்கற்ப மெல்லா-முகப்புற்ற
வெப்பொருளு மத்தப்பற் றிவ்வே டணைமூன்று
மெய்ப்பொருள் கண்டால் விடும். (௩௬௭)

மூவவத்தை

காணுமது நேரே நனவா நிலைபெறு
காணாமை காணு மதுகனவா-மொன்றையுங்
காணு தொழிகை சுழுத்தியாங் காணாமை
காணுங்கட் கில்லை யவை. (௩௬௮)

# அமிர்தசாரம்.

## நாற்கரணம்.

ஐய மனமு மபிமான மாங்கார
மையலற வேதுணிதன் மாமதியாஞ்-செய்ய
வருசிந் தனைசித்த மாகு மவையே
யொருநான்கா முட்கரண மொன்று. (௱௩௯)

## ஐம்பூதம்.

காசினிநீர் தீகால்வான் கந்தஞ் சுவையொளியூ
றோசைமா பூத முறுகுணங்கள்-மாசில்
செவிமெய்வாய் கண்மூக்குச் செப்பியநுண் பூத
மவையறிவு மைம்புலன்க ளாம். (௧௪௰)

ஓதுகுணம் வான்முதலா வொன்றிற்கொன் றேறுமுறை
யீதனடை பேர்க்குத லின்ப-நீதிவாய்
கையொடுகால் பாயு ருபத்தங் கருமங்கள்
செய்யும் புலனாகச் செப்பு. (௧௪௧)

பூதநிறம் பொன்வெண்மை செம்மை கருமைபுகை
யோது முருவ மதற்குரைக்கில்-நீதி
சதுர மதிபாதி மூன்றுறு கோண
மதியமாம் வட்ட மவையாம். (௧௪௨)

## உண்ணிலை.

புத்தி கருமப் புலன்பத்த தின்விடயஞ்
சத்த வசனாதி தான்பத்துச்-சித்த

மகமான வன்ஞான் கறிவா ஞெருவ
னகமா கியவிருபத் தைந்து. (கசங)

புறநிலை

தசைமயிர்தோ லென்புசிரை தண்ணிணநீர் மூளை
யுதிரம் பெலம்பசி தாக முறக்க
மிதுன மறப்பிருப்பு மேலோங்க லோடல்
கதிகிடத்தன் மானபயங் காதல் கதநா
ணிதமாம் புறத்திருபத் தைந்து. (கசச)

இருபத்தெட்டு,

விகுதி யிருபத்து மூன்றும் பகுதியு
நாலாறு கண்ட புருடனுங்-கால
முயர்ந்த வியோமம் வியோமா திதமென்
றியம்பு மிவையிருபத் தெட்டு. (கசரு)

தத்துவமுப்பத்தாறு.

தலமுதலான் மாவீறு சத்திசிவம் வித்தை
சலமில் சதாசிவ மீசன்-கலைமாயை
யேறுமிச்சை கால மிராக நியதியையைந்
தாறசுத்தஞ் சுத்த மரோ. (கசசு)

தத்துவந்தொண்ணூற்றாறு.

பூதநிறங் கோசம் புறநிலையு முன்னிலையும்.
வாத விகார மலங்குணங்க-ளாதார

மேக புருடவினை யஞ்சா லவத்தையென
வாக விவைதொண் ணூற்ருறு. (கசஎ)

### தத்துவநிச்சயம்.

உலவாத தத்துவத்தி னுண்மை யுணர்ந்தா
ரிலவா மிவையியம்ப லென்னை-பலவாகக்
கண்ணிலவு மாசுடையார் கண்டாற் பலவாமோ
தண்ணிலவொன் றல்லவோ தான். (கசஅ)

### குணசம்பந்தாவவத்தை.

முத்திற னான குணத்தன மூன்றவத்தை
யுத்தமமாஞ் சாத்திக மாமுணர்ச்சி-தான்கனு
மத்திம ராசத மாண்ட சுழுத்திதா
னத்தம தாமதம தாம். (கசகூ)

### அவத்தாந்தரவவத்தை.

நனவு முதலவத்தை நாலவையோ டொன்றின்
நனவு முதனாலுங் கண்டார்-கனவா
நனவு முதனாலுங் காணார்கள் காண்பர்
நனவாக ஞான கனம். (கருய)

நனவி னனவு புலன்வழக்க மாகு
நனவிற் கனவு நினைவா-நனவில்
மனநினை வின்மை சுழுத்தி நினைவின்மை
தனைநாடு துரியந் தான். (கருக)

கனவி னனவுபோற் காண்ட னனவாங்
கனவினிற் கண்டு மறத்தல்-கனவாங்
கனவிற் சுழுத்திகா ணாமைகாண் பானை
யனுமதித்த லாமற் றது. (௧௫௨)

சுழுத்தி நனவொன்றுந் தோன்றாமை தோன்றல்
சுழுத்தி கனவாஞ் சுழுத்தி-சுழுத்தி
யரிய வறிவா லழிக்கை சுழுத்தி
துரியமாஞ் சொல்லிறந்த பாழ். (௧௫௩)

துரிய நனவா மிதமுணர்ந்த போதந்
துரிய கனவா மகமுணர்ந்த-போதந்
துரியச் சுழுத்தி வியோமந் துரியந்
துரியம் பரமாகச் சொல். (௧௫௪)

ஆதாரகேவலாவத்தை.

சந்தித் திடம்புருவந் தன்னினிலை சாக்கிரமாங்
கந்தரத்தி னிற்கை கனவாஞ் - சுழுத்தியா
லிங்க மெனுமிதய மேவலா முந்திக்கு
நால்விரலி னுலா வது. (௧௫௫)

கரணகேவலாவத்தை

நனவிற் பதினாற் கரணமு நான்கு
கனவிற் சுழுத்தி கருத - லறமூன்றுங்

ஆனதாலை வேருகை தான்றுரிய மற்ற
தெனதியா னற்ற விடம். (கருசு)

## அவத்தைக் கழிவு.

ஒருக்க நனைப்போங் கனைப்போர் முளத்தை
தரிக்கத்தற் றியானத்திற் றற்சுழுத்தி - பேரு
மரிக்குஞ்சமாதி துரிய மதீதம்
புரித்துப் பரம்விளங்கப் போம். (கருஎ)

## தரிசனவத்தை.

சுழுத்திநகர் வின்வரிற் றேன்றியிடுஞ் சீவன்
பழிப்பினதீ தத்திற் பரமன்—விழித்தவனேற்
றீதொருங்க வாண்ட குரவன் றிருக்கோல
மேதொருங்கித் தோன்று மென. (கருஅ)

## மாவாக்கியம்.

அதுநீயா னென்னு மப்பதங்கண் மூன்றி
னதுவென் பதுபிரம நீயென் — பதுசீவ
னானெனும்பதந்தா னவ்விருவ ரைக்கியமா
மூன்று முபாதியொழித்து. (கருகூ)

## ஓங்காரம்.

புகலு மறையவத்தை காலம் புவன
மிகலுகுணந் தீயிறைவர் செய்கை—தகவே

யகார வுகார மகார மதனாற்
சகலமுந் தாரக மாம். (௧௬0)

அசபை.

அஞ்ச வுருவிருபத் தோரா யிரத்தறுநா
றெஞ்ச லறநின் றியம்பாமற்-றுனியம்பித்
தஞ்சப் பிரமத்திற் றன்வேறன் றென்னுமதே
அஞ்ச லொழிக்குந் துணை. (௧௬௧)

ஸ்ரீபஞ்சாக்ஷரம்.

சிவமுதற் றத்துவங்க டேவதைகள் செய்கை
யவனிமுதற் பூத மவத்தை-புவனங்கள்
கோசம் பொறிபுலன்கள் கூறுங் கரணமெலா
மீசன் றிருவஞ் செழுத்து. (௧௬௨)

ஸ்ரீ அஷ்டாக்ஷரம்.

நாராய ணாய நமவென் பொருள்சீவ
னோரா றிறையேக மென்றறிகை-பேர்வேறு
காரண காரிய காயத்தா னென்றாகும்
பூரண போதப் பொருள். (௧௬௩)

வாக்கியவிவேகம்.

வாக்கி யமூன்றி லிடைவொன்று வொருதன்னைப்
போக்கி யிரண்டு பொருளுடா-னருளாலே

பாக்கியத்தால் வந்து பலிக்கி னலதில்லை
வாக்கியத் தார்கா ணுமாறு. (கசுந)

சீவபரவேறுபாடு,

அறிவா னறிவனென வாகத்தே சீவ
னிறையோனென் பாருண் டிருவர்—பிரியாச்
சுபாசுபங்க ளாலிவரைச் சொல்லவரு பேத
வுபாதிகளா னல்லதுரு வொன்று. (கசுச)

சீவலக்ஷணம்.

இருமைக மெய்து மிரண்டு தொழிலு
மதிய தவையறிந்த மாத்திரமே- சீவ
னிதன் பலங்க டனக்கில்லை நித்த
னதனை யறிவா னவன். (கசுரு)

பரலக்ஷணம்.

எப்பொருட்குங் காரணமா யெப்பொருட்கு மீசனு
யெப்பொருட்குந் தோற்ற நிலையிறவா—வெப்பொருடா
னல்லா திலதா யகமும் புறமுநிறைந்
தெல்லா மறிவா னிறை. (கசுசு)

சீவபரவேறின்மை.

உபாதி யொழிந்தா லுயிர்பரங்க ளொன்றே
சுபாசுப ராய்நின்ற தோற்ற—முபாதி

கடாகாய மாகாயம் வேறாகக் காண்கை
யடாகா ணறிவொன்றே யாம். (கசு அ)

மாயாவிவேகம்.

அறியாத மாயைக் கடியறியத் தேடி
னறிவா லறியவொணா தாகு-மறியாமைக்
கேது வறியி லறிவா லிருட்கேது
சோதியைக் கொண்டறிந்து சொல். (கசுக)

உலகவிவேகம்.

போதக்கண் பூதங்கள் பொய்யா மவைமெய்யாம்
பேதக் கடாதிப் பிறழ்வுகளிற்-பேதங்கள்
சுத்திகையின் வெள்ளியின்மெய் தோன்றப் படுங்கனவு
நித்திரையைப் பாரந் நிலை. (கஎ0)

அயலாக மெய்போ லனந்தபே தத்தை
மயலாகக் கண்டமா மாயத்-துயில்போனு
லெண்படு மிவ்வுலக முண்டாமா றெங்ஙனே
கண்படைபோ யுண்டோ கனு. (கஎக)

வன்னி யிருக்கமரம் வன்மிசையூ னேதே
தன்னிகழ்ச்சி யின்றேவித் தன்மையர்-என்னை
தன்னிகழ்ந்தா லுண்டோ சகத்துன்பஞ் சற்குருவால்
வன்னிகண்டா லுண்டோ மரம். (கஎஉ)

ஞானமுதன்மை.

யோகாதி மூன்று முணர்வதனுக் கங்கமா
மாகா தெனிற்பதங்க ளாயழியுந்—தேக
மொழிய வருமுத்தி யொன்றுதற்கு ஞான
விழியை யலதில்லை வேறு (௧௭௩)

ஞானலக்ஷணம்.

பொறிவா யறிபுலன்கள் போதக் கரண
வறிவான வெல்லா மடங்கி—யறிவா
யறிவா னறிவ தறியும் பொருளென்
றறியா தறிவ தறிவு. (௧௭௪)

ஞானப்பெருமை.

அலையிலே கன்ம மடியிலே யாக்குந்
தலையிலே ஞானந் தரிக்கு—மலையா
தருமறை நூலை யறியு ஞானத்தின்
பெருமை யறியார் பிறர் (௧௭௫)

ஞானபூசை.

இன்பக்கண் ணீராட்டி பத்தி யெழின்மலரா
வன்பிட்டுத் தம்மை யமிர்தாக்கி—முன்புற்ற
சிற்சடமெல் லாஞ்சிவ மாகநோக் கல்சிவற்
கர்ச்சனை யாகு மது. (௧௭௬)

ஞானயோகம்.

யோகத் தபாவமெனும் யோகமது கைகூடி
னேகப் பொருளதனை னெய்தியிடு-மேக
மதுவா யிதுவன் றெனுவகண்ட மான
வதுவாகை மாயோக மாம். (௧௭௭)

ஞானவலி.

புணர்பாவ புண்ணியங்க ளெண்ணிறந்த தெல்லா
முணர்வா லெரிகொளுவி னுண்டோ-வுணராமை
கூடவெந் தேறுந்த துண்டோ குழைந்தமாங்
காடுவெந் தீப்பட்டக் கால். (௧௭௮)

யோகநழுவுதல்.

யோகத்தா லேகத்தைக் கூடா திடையினுயிர்
போகிற்றன் பொல்லா வுலகிற்-புகாநல்ல
யாகத்தர் னெய்து பயனெல்லா மெய்திப்பின்
யோகத்தரன் முத்தி யுறும். (௧௭௯)

ஊழ்வலி.

தந்த வறியாமை போகவுந் தான்போகா
திந்த வுடனிற்ப தென்னென்னி-னுந்தும்
குசவன்கை விட்டாலுங் கூடா திகிரி
யிசைவந் திடாதே விட. (௧௮௦)

முத்திசாதனம்,

குருபயன் வேண்டாத் தருவினைகள் சாந்தி
சுருதிகள் கேள்வி துறவி—குருவைப்
பெறுதற்கிங் கேது பெறற்கரிய முத்தி
யறிதற்கிங் கேது வவன். (கஅக)

ஆசாரியலக்ஷணம்.

சிறையா முடன்முதல் சித்தமீ றாக
விறையோனே யானல்லே னென்று—மறைநூ
யதுவானா யென்ற தெதுவானே னென்று
விதுநீகா னென்பா னிறை: (கஅஉ)

ஆசாரியன்மகிமை.

உள்ளந் தனினின் றொளித்தான் பரன்குரவன்.
கள்ளந் தனைத்தவிர்த்துக் காட்டினான்—வள்ள
லருவான கோலமோ வக்கோலங் காணக்
குருவான கோலமோ கூறு. (கஅ௩)

அனுசாரியலக்ஷணம்,

துயிற்புணர்ப்பாற் சொர்ப்பந் தொடுகடனீ ராமை
மயிர்ப்படா மின்மினியின் வன்னி—முயற்கோ
டெருத்தின்பான் மெய்யுணர் வில்லாதான் பண்ணுங்
குருத்துவமு நோரகக் கொள். (கஅ௪)

## பக்குவலக்ஷணம்.

காய நிலையின்மை கண்டான் கருத்துச்செந்
தீயி னடுவிற்றான் சித்தஞ்--சினவரவின்
வாயுறு மண்டுகத்தின் னெஞ்சம் வரியுழுவை
தாயவ னுள்ளஞ் சமம். (௫௮௫)

## அபக்குவலக்ஷணம்.

தம்பாற் றவந்தூய்மை வாய்மை தயாவிலா
ருய்ப வடிபேணா ருள்ளபொரு-ளம்பார்
பொருள்செய்ய வாதரிப்பார் போக நினைவா
ரருள்செய்ய லாகா தவர். (௫௮௬)

சித்தியா நிற்குஞ் சிலர்க்கு விபரீதப்
புத்தியா குஞ்சிலர்க்குப் போதமே-சுத்தமாம்
பானீய மொன்றேனும் பாம்புண்டா னஞ்சினு
மானீயு நல்ல வமிர்து. (௫௮௭)

## சீஷசரிதை

கழல்போற்ற வாயாரக் கண்மல்க வுள்ள
மழல்சேர் மெழுகி னழிவெய்த-யாக்கை
யெழில்சேர் குருபரன்ற னேவலை செய்க
நிழல்போல முன்பின்னா நின்று. (௫௮௮)

சந்தனந் தாம்பூலந் தாரார்த னஞ்சயன
மந்தனம் பொய்வெய்ய மாற்றங்கள்—சிந்தைக்
கரவபி மானங் கலுழ்ச்சி களிப்பின்ன
குரவன்முன் மேவாது கொள். (௱அ௬)

### சம்பிரதாயலக்ஷணம்.

அங்கையுற்ற நீராக்கொண் டாக்கை பொருளாவி
பங்கயக்கண் ணாற்கொண்டு பண்டைவினைச்—சங்கையற
பூத மலமுழுதும் போத மெனநிகழ்த்தப்
பாதமலர் வைத்தான் பரன். (௧௬௰)

### ஊனுயிர்வேறுபாடு.

ஆக்கை முதற்சித்த மீறாக வெப்பொருளு
நோக்கு மவன்றன்னை நோக்கா—தனவசடமர்ச்
சாக்கியா நின்றவவன் சற்குருவா வந்தபரன்
வாக்கில் வெளிப்படுங்காண் வந்து. (௧௬௧)

கலைக்கட்டளை முற்றிற்று.

---

### அநுபவக்கட்டளை,

### சிவதரிசனம்.

போக்கு மனநெருக்கிப் போதமங் கில்லாமை
நோக்கிய நோக்காலந் நோக்கத்தை—நோக்கென்னுந்
தோன்றாத வண்ணம்போய்த் தூஞ்சிற் றிருளறிவாச்
சான்றாகி நின்றேனுன் றான். (௧)

வினைப்பய னென்னை யினிமேவா வின்னுநீ
யனைத்து மழிந்து மழியே-னெனக்கின்று
முன்பக்கங் கீழ்மேன் முதலிடையீ றென்றனவு
மென்பக்கற் காணே னியான். (௨)

இல்லது முள்ளது மெல்லா மறிவேனு
னெல்லாப் பொருள்கட்கு மேதுநா-னெல்லா
வுலகும் படைத்தழித்துக் காத்துணர்வா யொன்று
மிலகும் பரமீசன் யான். (௩)

## ஆரியதூஷணம்.

விரிந்தா ருலகறியு மேனோக்கா துள்ளே
புரிந்தாற் றனையுணரும் போத-மருந்தவர
மாட்சி யுடைய பரமெனவே மற்றிதன்
காட்சியு மாட்சியுங் கண்டு. (௧)

காரணங் களிற்கலந்து காணாமை நின்றான்
காரணங் களையொருக்கிக் கண்டான்-றனைத்தான்
காரணியாய் நின்ற விவனதே கண்டாய்
மாரணம் பிறப்புற்ற மால். (௨)

## அதீததரிசனம்.

அறிவென் பதனு லறியும் பொருளு
மறிவு மறிவானு மாகும்-பிறிதின்றிச்

சொல்லாட் டில்லாத் துரியாதீ தம்பிறக்க
வெல்லா மவிழு மிரு. (௬)

தேய்ந்து தெரிவு தெரியாமை யென்பதற
மாய்ந்த தெனவும் வகையில்லை—மாய்ந்ததுவும்
போந்த விடத்தே புகலு மஃதொழிய
மாய்ந்த விடத்தில்லை மற்று. (௭)

வியோமதூஷணம்.

அடங்குகை யாலே யதீதமு நின்னை
மடங்கொள் சுழுத்தியை மானுந்—திடங்கொள்ள
நில்லாக் கனவே துரிய நிலையிரண்டு
மல்லாமை யாலவத்தை யாம். (௮)

பாதரிசனம்.

அதீதம் பொருளென்ற லப்பொருளே தென்று
னதீதம் பொருளா ரறிந்த—துதனொருவ
னுண்டாங்கா னென்றொருன் றுரைத்தா னுரைத்தலுமே
கண்டா னதுகாணுங் கண். (௯)

பிறிதுக் கறிவிருந்த பெற்றியே னென்ன
பிறிவிற் கறிவா விருந்த—வறிவை
யறிவே யறிகின்ற தன்றி யறியப்
பிறிதேது மில்லை பிறழ்வு. (௰)

அகமிதங்க ளில்லை யறிவயர்வு மில்லை
யிகபரங்க ளென்றறிய வில்லை-சகமு
மெரியினுக்கு வெம்மையுரு வென்ன விறைவ
வுருவதற்கு நேரே புணர்வு. (கக)

ஐக்கியவிருப்பம்.

பூத மறிந்த வறிவுயிராம்போர்தமர்
யாது மறிந்தவறி வீசனும்--பேதமறப்
புல்லிற்றெங் கேயென்றான் புத்தேளிர் கோக்கண்ணீர்
மல்கித்தான் வீழ்ந்தான் மகன். (கஉ)

பின்ன மறிந்த செயல்போலப் பின்னமே
தன்னை யறிந்துவுந் தற்செயலாய்-நின்ன
செயன்மான் டறுகாண் சிவமென்று னீச
னயன்மா லறியா லவன். (கரு)

ஒருக்கவே றில்லா வுணர்வாம் பாமும்
பருக்க விடயமெனப் பண்ணி-பருட்சொருபன்
பேசா திருவென்னப் பேதங்க ளறுதிருந்தான்
வாசாம கோசரத்தே மாண்டு (கச)

இலங்க வறித னன்வாகு மெங்கும்
கலங்க வறிதல் கனவாம்-புலன்கெட்ட

தெல்லாஞ் சுழுத்தியா மிம்மூன் றவத்தையினு
மல்லா தனுகா ணறிவு. (கரு)

ஊனு முயிரு முணர்வு முடனிறந்து
யானு மிறந்து பரனிறந்து-கோனே
வடிவோது மாறின்றி வாக்கிறந்து நீயிப்
படியே யிருக்கும் படி. (கசு)

இரண்ட சமவாயந் தீர்பாழிற் சிவ
னிரண்டாம்பா ழிற்றோன்று மீச-னிரண்டும்போய்
மூன்றும்பா ழிற்றோன்று மூன்றும் பதப்பொருளாஞ்
சான்றுரு மில்லாத் தனி. (கஎ)

சொரூபதரிசனம்.

ஆவபா வாபாவந் தீர்ந்த வகோசரமு
மோவு மவத்தைகளி னொன்றுக்கிச்-சீவபரந்
தானற் றிருந்த தனிப்பதங்கா ணீதென்று
மோனத் திருந்தான் முனி. (கஅ)

நோக்கினேன் றுனுய் நிகழ நுனிதமறை
வாக்கினற் கூறிய வான்பொருளை-நோக்கிச்
செயிர்தீர்ந்தே னென்றெழுந்தான் மைந்தன் சினையின்
னுயிரீந்த மீனதனுக் கொப்பு. (க௯)

நிறைவுற்ற தெவ்வாறு நின்மலனுந் தன்னை
யறிவித்த வாறறிய லாகா-நிறைய

மூழுத்துமா லானந்த முந்நீரி னுள்ளே
யழுத்துமு மைக்குடத்தி னும். (௨௦)

அநுபூதி.

இருந்த படியே யிருந்தபடி காண
விருந்த படியே யிறைவ-னிருந்தபடி
யப்படியே யென்னு மஃதொழிய வப்படியை
யெப்படியே யென்றுரைக்கே னியான். (௨௧)

ஊனானா யூனிற் குயிரானா யுள்ளுணர்வு
தானானாய் போதத் தமமானா-யானானை
யென்னானா டொண்ணானா விறையானா யாதுமாய்
நின்றானா யென்றானாய் நீ. (௨௨)

காண்டகையே யென்கைக் கடனன்றே யில்லெனின்
றண்டகைதான் சூடார்க் கயலன்றே-மாண்டேன்
சயம்புவே யென்னினுரை தானுண்டோ வெவ்வா
றியம்புவே னென்றறியே னியான். (௨௩)

நாரணனு நான்முகனு நாடப் பெறாரின்ன
மாரணமுஞ் சொல்ல வறிகுதிலை-காரணநின்
செம்மா மலர்ப்பாதஞ் சென்னிப் பொறித்தார்க்குக்
கைம்மாறு காண்கிலேன் காண். (௨௪)

ஒல்லை யுலகு படைத்தழிக்க வுன்னுணர்வால்
வல்ல சொருபாவென் வஞ்சமனக்-கல்லைத்

திரித்தருள வேண்டியொரு தேசிகனுங் கோலந்
தரித்தருள வேண்டியதே தான். (உரு)

சொருப வெனக்குன் றுணைமலர்த்தாள் சூட்டி
யிருவரு மேயொப்பே யென்றே-வருளாலே
நின்னை யணையாமே நீயு மருளாலே
யென்னை யணையே னியான். (உகூ)

வந்திக்கச் சென்னிவாய் வாழ்த்த மனமுருக
விந்தத் திருக்கோலத் தெம்பெருமான்-வந்தெனக்குப்
பொன்னங் கழலருளிற் பூரணமே யாதச் சொருப
மின்னம் பிறப்பே யினிது. (உஎ)

என்கை பணிசெய்ய வெம்பெருமாற் கெப்பெருமா
னென்கை பணியாக வென்வாக்கு--நின்கீர்த்தி
கற்றென்றும் பாடக் கனியமனங் காணிறைவா
மற்றொன்றும் வேண்டேன் வரம். (உஅ)

அளித்தான் றிருமேனி யைம்புலனுங் கொண்டு
களித்தான்பே ரானந்தக் கண்ணீர்-குளித்தான்
குளித்தானம் பாலென்றுங் கூர்ந்தன்பான் மீண்டு
மளித்தா னருட்சே வடி. (உகூ)

ஆ. திருவெண்பா உ௱உ0.

அமிர்தசாரம் முற்றிற்று.

## அடங்கன் முறை

# பாட்டு முதற்குறிப்பகராதி



(ஒ)

தெளிதரவு கெடவினிய பாதங்க ணியருளி
யிதுவதென வொருசொல்மொழி யாயென்றுதாழு
முரியபழ வடியர்வெளி யேகண்டு வாழ்வதுவு [வது
முலகரொரு வருமறியு மாறின்றி மாளுவது
முபநிடத மடையுநெறி யேநின்று பாடுவது
முருவொடரு வலதொர்பொரு ளாமென்று கூறுவது
நிரதிசய பரமசுக மேயென்று நாடுவது
நினையவுரி யவர்கள்பிற வாரென்று பேசுவது
நிகழ்வடிவு கருணையென வேயென்று மோதுவது
நிறைவுகுறைவறுமமிர்த மாயன்பர் மூழ்குவது
மாறொடரி யயனமரர் கோனின்று தேடுவது
மகிலபுவ னமுமுடைய கோனென்று பேணுவது
மறுசமய விததிபல வாதங்கொ டாடுவது
மறிவிலெனுள் புகுதுசொரு பானந்த நாதனையே ()
தனையா ருந்தெரி யாதென்று
தடுமா றும்படி தானென்று
நினையா திங்குரு வாய்வந்து
நெறிதா னென்றறி யாவன்பி
னெனையா ளுஞ்சொரு பானந்த
னிருபா தந்தலை மேல்கொண்டு
புனையா வந்தக மேநின்று
புலையா டும்புல னைஞ்சே. (௩௩)

வேறு—ஊசல்.

அச்சமறுத் தாண்டானென் றாடாமோ வூச
லாண்டருளுந் திறம்பாடி யாடாமோ வூசல்.

மெச்சியவன் கழல்பரவி யாடாமோ வூசல்
வெறுமறிவே யாமென்மன் றூடாமோ வூச
லிச்சகத்தே மெய்ச்சொருபா னந்தனெனத் தோன்றி
யின்பவெள்ளத் தழுத்தியிட வென்னையுமாட் கொ
பிச்சனென வும்பாடி யாடாமோ வூசல் [ண்ட
பெருங்கருணைப் பெருமானென் றூடாமோ வூசல்()

விருத்தம்.

ஊச லாடுமிவ் வுடலுயி ரிதுதனை
யொருபொழு தொழியாதே
பூச லாடிடு பொறிபுலன் மனனொடு
புணர்வுறு குணன்மூற்றுந்
தேச லாதன சிதைவகை யுருவொடு
திகழ்சொரு பானந்தா
பேச லாமலா வலவென துளம்வரு
பெருகிய வருடானே. (௬௫)

கட்டளைக்கலித்துறை

தானே வணங்குமென் சென்னியென் னாவுனைச் சாற்று
தொறு, மூனே யுருகு முரோமஞ் சிலிர்க்கு முகுமென்
கண்ணீர், நானேது மொன்று மறிகின்றி லேன்வெறு ஞான
கனத், தேனே யருட்சொரு பானந்த நீதந்த செல்வினையே.